20-5

உ

ஓம் கணேசாய நம:

# ஞானனந்த விஜயமென்னும்

# முத்திநெறி.

இஃது

நாகை. வெளிப்பாளையம்

மு. கிருஷ்ணசாமி பாகவதர் அவர்கள்

எழுதியது.





கீவளூர் குஞலயா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1940.

உ.

ஓம் கணேசாய நம:

"தம்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே" அப்பர் சுவாமி.

ஞானனந்த விஜயமென்னும்

# முத்திநெறி.



இத்துடன் வடலூர்

ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் சரித்திரத்தை
பாடலாகச் செய்யப்பட்டிருக்கிறது.

இஃது
நாகை. வெளிப்பாளையம்
மு. கிருஷ்ணசாமி பாகவதர் அவர்கள்
எழுதியது.

கீவளூர் துணலயா அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை]　　1940.　　[ரூ. 1—0—0.

20-5

# முகவுரை.

உலகில் எல்லோரும் இச்சிப்பது துக்கநிவர்த்தியும் சுகப்பிராப்தியுமே அச்சுகப்பிராப்தியையேமோக்ஷமென்றும், அல்லது முத்திநெறி என்றும் வேதமுதல் சகல சாஸ்திரங்களும் முறையிடுகின்றன. ஆனால் சுகப்பிராப்தியின் பொருட்டு ஸ்திரீ தன புத்திரர்களை அநேகர் தேடுகிறார்கள், துக்கநிவர்த்தியின் பொருட்டு 32 தானதர்ம முதலியவைகளைச் சிலர் செய்கிறார்கள், இன்னும் சிலர் அநேகவித முயர்ச்சிகளும் அப்பியாசங்களும் செய்கின்றார்கள், ஆனால் இப்படிப்பட்ட எவ்வித முயற்சியாலும் துக்கமற்ற ஆனந்தம் கிடைக்கிறதில்லை. சகல துக்கங்களுக்கும் காரணம் எதுவோ அது நீங்காமல் சுகம் உண்டாகமாட்டாதென்று உபநிஷத்துக்கள் கோஷிக்கின்றன. அங்ஙனமாயின் துக்கமற்ற சுகமே வடிவான பொருள் யாதெனக் கவனிக்கின் சச்சிதானந்த வடிவமான ஆத்மாவே பிர்ம்மமே (கடவுளே) சோகமற்ற சுகசொரூபமாம் என்பது துணிவுபெறும் அதற்கு வேறானதெல்லாம் துக்கமென்றும் அதுவே அஞ்ஞானமென்றும் அதன் காரியமான காணப்படும் ஜெகத்து முதலிய நாமரூபவஸ்துக்கள் யாவும் பிரம்மத்துக்கு வேறாக இருப்பதால் அவையே துக்கரூபமாமென்றும் முடிவுபெறும் ஆகையால் அஞ்ஞானம் நிவர்த்தி ஆகாதவரையில் துக்கம் அடியோடு நிவர்த்தியாகமாட்டாது. இந்த அஞ்ஞானம் ஞானத்தால்தான் நிவர்த்தியாகும்.

ஞானமென்பது நான் யார் என்உள்ளம் எது என் ஞானங்கள் எவை என்பதை விசாரித்தறிவதேயாம்.

அஃதாவது,

(உலகெதுயாமாரென்ன உற்றுமின்றானாருமட்டும்
கலகமார்பிறவிமோகங் கங்குல்போல் மூடிநிற்கும்
அலகிலாவுலகும்யாமும் அழிவில் சிற்சோதியன்றே.)

என்னும் பிரமாணத்தை ஞானசற்குரு முன்னிலையில் ஐயந்திரிபறவிசாரிக்கும் விசாரணையால் என்றும் சுதசித்தமாய் உள்ள தனது நிஜசொரூப நிலைகிட்டும் என்பதே ஞானமாம். அதனையே முத்திநெறி என்ன இந்நூலில் சங்கிரகமாய் (சுருக்கமாய்) எழுதப் பட்டிருப்பதோடும் இதற்கான அதிகாரிகளும் பக்குவிகளுமல்லாதவர்கள். அனுஷ்டிக்கவேண்டியமுறைகளும் எழுதப்பட்டிருக்கிறது. எல்லாம் குருமுகமாய் நன்குவிசாரித்து எவ்வழியிலும் நாம் ஈடுபடவேண்டும் என்பதே இந்நூல் இயற்றியதின் கருத்தேயொழிய வேறல்ல இந்நூல் முத்திநெறி என்று பெயரிட்டு இருப்பதால் பக்திஞானயோகத்தில் விருப்பமுள்ளவர்களுக்கே முக்கியபிரயோஜனத்தை தருமென்பது ஒவ்வொன்றையும் ஆழ்ந்து கவனிப்போர்களுக்கு நன்கு விளங்கும்.

நாகைவெளி.
விக்ரமஹு ஆனிமீ

மு. கிருஷ்ணசாமி நாயுடு,
பாகவதர்.

20-5

# மதிப்புரை.



உயர் திருவாளர், மு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களைச் சின்னாட்களாக யான் நன்கறிவேன். அவர்கள் நாகை வெளிப்பாளையத்தில் இனிது வாழ்ந்து வருகின்றார்கள்.

திரு. மு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் அன்பு அடக்கம் முதலிய அருங்குணங்கள் அமையப்பெற்றவர். தென்மொழி வடமொழி இரண்டிலும் பற்றுள்ளவர், உயிர்க்கு உறுதிதரும் பலநூல்களை ஞானாசிரியர்பால் முறையாகப்பாடங்கேட்டுணர்ந்தவர். தத்துவசாஸ்திரங்களையும், வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களையும் விளக்கமுறக் கற்றவர். "ஒன்றேகுலமும் ஒருவனேதேவனும்" என்ற ஆன்றோர் வாக்கின்படி, சாதிவேற்றுமை, சமயவேற்றுமைகளைக்கருதாது, யாவர்மாட்டும் சமரசமாய்ப் பழகிடும் தன்மையுடையவர். கடவுள் வேற்றுமை கருதாமல் வாழ்ந்திடும் கண்ணியர். தற்புகழ் விரும்பாத பொற்புறுமனத்தர். சொற்சுவை பொருட்சுவையோடு பக்திசுவையும் ததும்புமாறு சைவ, வைணவ சமயாசாரியர்களின் திவ்விய சரித்திரங்களைத் தக்க பக்கவாத்தியங்களோடு காலக்ஷேபம் நடத்தும் சக்திவாய்ந்தவர். நவரசத்தோடு கூடிய தண்டமிழ்ப்பாக்கள் பலபாடிடும் பண்புடையவர். தியாகையர் கீர்த்தனைகளைச் சித்தரித்துப்பாடும் திறமையுடையவர். இன்னோரன்ன சிறந்தபண்புடைய இவர் "தாமின் புறுவதுலகின்புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந்தார்" என்னும் பொய்யில் புலவன் பொருளுரையை நன்குணர்ந்து, இவ்வுலகின்கண் அஞ்ஞானத்தால் அவதியுறும் ஜீவகோடிகள் யாவும் நல்வினை தீவினை என்னும் கயிற்றால் பிணிக்கப்பட்டு

பிறப்பிறப்பைப் பெறுகின்றன. இச்செயலை நீக்கி யாவரும் பேரானந்தப் பெருவாழ்வைப்பெற வேதாகமபுராண இதிகாச காவியங்களிற் கூறப்பட்ட கருத்துக்களையும் மேற் கூறிய நூல்களை ஐயந்திரிபறக்கற்றடங்கிய ஆன்றோர்களின் அருங்கருத்துக்களையும் அமைத்து "முத்திநெறி" என்னும் பெயரிட்டு ஓர் இனிய நூலை இயற்றியுள்ளனர்.

இந்நூலில் எம்மதத்தார்க்கும் சம்மதமான கருத்துக்களும், வேதாகமபுராண இதிகாசகாவியங்களின் சாரமான பல சன்மார்க்க விடயங்களும், கற்றோரும் மற்றோரும். அறிதற்கேற்ற சிற்சில உவமைகளும் சைவவைணவ சமயாசாரியர்கள், தாயுமானர், அருட்பிரகாசவள்ளலார், பட்டினத்துப்பிள்ளையார், திருமூலனார் முதலிய பெரியார்களின் வாக்குகளும் அமையப் பெற்றுள்ளன. வாசிப்போர்க்கு விளங்குமாறு மிக்க எளியநடையில் பல தென்மொழி வடமொழிப்பதங்கள் அமைந்துள்ளன. கற்றறிந்தார்க்கு இந்நூல் ஓர் கருந்தனமாகவே கருதற்பாலதாகும்.

இந்நூலாசிரியர் எழுதிய "முத்திநெறி" என்னும் இந்நூலையும், இதனோடு சேர்த்துள்ள, அருட்பிரகாச வள்ளலாம் ஸ்ரீமத், இராமலிங்கசுவாமிகள் சரித்திரச்சிந்தனையும், பலதோத்திரப்பாடல்களையும் அடியேனும் காணும் பாக்கியம் பெற்றேன். இந்நூலைக் கண்ணுறும் அன்பர்கள் யாவர்க்கும் இந்நூல் நால்வகைப் புருஷார்த்தங்களையும் அளிக்கும் என்பதில் ஐயமின்று. ஆதலின் கவலையுற்ற போது கைகொடுத்து உதவும் கல்விகேள்வியிற் சிறந்த ஆன்றோர்கள் இந்நூலினை அன்புடன் ஆதரிப்பார்களென நம்புகின்றேன்.

இந்நூலாசிரியர் "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற பெரியார் வாக்கின்படி இதுபோன்ற பலநூல்களை

எழுதிவெளியிடுவார்களாயின் இவ்வுலகோர் இகபரசாதனங்களை பெற ஏதுவாகுமென்பது திண்ணம். இப்பணியில் இவர்கள் ஈடுபடுமாறுசெய்து ஊக்கமளிக்கவேண்டுவது நம்மவர்களின் கடமையாகும்.

தன்னலங்கருதாது தொண்டுபுரியும் இந்நூலாசிரியராகிய மு. கிருஷ்ணசாமி நாயுடு (பாகவதர்) அவர்களுக்கு சர்வஜீவதயாபரனாகிய இறைவன் நோயிலா உடலையும்; ஒவிலாநாளையும் அளித்தருளவேண்டுமாறு மனமார இறைஞ்சுவோமாக.

மு. ஷண்முகதேசிகர்,
தலைமைத் தமிழாசிரியர், நாஷனல் ஹைஸ்கூல்,
நாகப்பட்டணம்.

# சாத்துக்கவி.

---

## திருநாகை, காந்தி பாகவதரென்னும் பாலசரஸ்வதி
## N. S. இராஜாராம் பாகவதரவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆலமர்ந்தான் அன்றுமௌனமதேற்றுமெய்ப்
பொருள்தன்னையோர்
கோலமேவு குறிப்பினுல்வர் கொளக்கொடுத்ததை
யொத்ததே
சீலமார்கட நாகையில்வெளி சேர்ந்துலாவு
விவேகியாம்
ஞாலமேகரை யேற்றுவான் கிருஷ்ணசாமி
நாயுடு சொற்றநூல்.

---

நேரிசை வெண்பா.

தத்துவமல்லாத சராசரங்களெங்கணுள
தத்துவத்தைச் சோதித்துத்தாணுதற்-கித்துறையே
யன்றிப்பிறிதிலையா லாய்ந்துய்ம்மினிந்நூலே
யன்றிச் சுருக்கமெஃதாம்.

---

ஸ்ரீசற்குருவே துணை:

( ஞானனந்த விஜயம் என்னும் )

# "முத்தி நெறி"



ஓம் கணேஸாயநம, கார்த்திகேயநம, சிவாயநம, விஷ்ணுவேநம, பார்க்கவியே நம, கௌரியேநம, பாரதியேநம, பிர்ம்மதேவாயநம, நாரதாயநம, தெக்ஷணாமூர்த்தியேநம, தத்தாத்ரேயாயநம.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ருஜகாசாரிய
ஸ்ரீமத் சங்கராசாரிய பதாம்புஜேயநம
ஸ்ரீ சற் குரு வே நம:

## குருபரம்பரைத்துதி.

1. அங்கலிங்க வைக்கிய முணர்த்துதற்
கெங்கனு மிலசும் பிர்ம்மமோருயர்
அங்கமாயிவ்வகிலத் தெழுந்தருள்
சங்கராசாரியர் தன்பதமேத்துவாம்

2. சகலருங் கடவுள் தன்னையுற்றிட
ரகலவேவண்டிக் கைவல்யமறைந்தநற்
சுகசொரூப நற்றண்டவ மூர்த்தியின்
மிகுபதத்தினை மேவிப்புகழுவாம்.

3. கைவல்யமெனு வேதாந்தக் கற்பகத்தருவை யெந்தன்
மெய்யகத்திடை விளங்கமேவிவந்தளித்த நாகை
ஐயனும் சௌந்தராஜ வருட்குரு தனக்குயானுஞ்
செய்வகை யொன்றுங் காணேன் திருவடி போற்றி
போற்றி.

4, ஞானந்தவத்தின் மிகு ஜீவகாருண்யமும்
சாந்தமும் சரியை யென்றும்
தத்துவ முணர்த்துமருடே சிகர்க்குப்பணிகள்
தான் செய்தல் கிரியை யென்றும்
ஞானந்தரும்புமறிவினை யறிந்தருள் நெறியை
நாடலுயர் யோகமென்றும்
நாதனருளாலறிவு நானெனத்திடமதாய்
நன்குணர்தல் ஞானமென்றும்
ஆனந்தமாமெனக் கிடர்பிறப்பில்லை யென்
றறிவதே நிட்டை யென்றும்
ஆகமிந்திரிய கரணகரும - மறிவாமெனக்
கணுகாதெனத் தெரிந்தே
மோனந்தனைப் பெற்றுயாதொன்றும் நாடாத
மோனமுயர் சகசமென்றும்
முத்திமுடிவருள் ஞானவெங்கிட்டராம குரு
முத்தனையகத்துள் வைப்பாம்.

5. சற்குரு பாதமல்லால் சரியையாம் பூசையில்லை
சற்குரு மூர்த்தியல்லால் கிரியையாம் தியானமில்லை
சற்குரு வாக்கியமல்லால் யோகமாம் மந்திரமில்லை
சற்குரு கிருபை ஞானந்தனைப்பெறல் முத்திதானே.

## குருப்பிரபாவம்.

ஓம் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாய், ஆதிமத்யாந்தரகிதமாய், இதுவல்ல இதுவல்லவென வேதங்களும் தேடிக்காணமுடியாததாய், ஈஷணாத்திரயங்களின் எல்லையைக்கண்ட மகான்களுக் கெளியதாய். உன்மத்த பாலபிசாசம்போல் உலகிற்றிரியும் உத்தமர்களின் வடிவினதாய், ஊரும்பிபீலிகாதி பிரம்மபரியந்தம் எள்ளிலெண்ணை போல் எங்கும்நிறைந்ததாய், எல்லாமாய் அல்லவுமாய்,

ஏகமாய், ஐயமுற்றவர்களுக் ககப்படாததாய், ஒருமனப் பட்டவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல்வதாய், ஓமெனும் நாதவடிவாய், ஔதாரியாதி குணங்களின் பல னுய்க் கிடைக்கும் புண்ணியமானது, பலாபேட்சையற்ற விடத்தில் சமதிருஷ்டிக்கு மூலமாயிருந்து அதன் மூலமாய் அந்தர்முகப் பார்வையுற்று, உள்ளேதனித்து, அணுவுக் குளணுவாயும் மகத்துக்கு மகத்தாயும் விளங்கும் சொரூபம் அங்குஷ்டமாத்திரமாய், இருதய கமலத்தில் விளங்குவதாய் நிராலம்பமாய்ப் பேசவேண்டிய இடத்தில் வாய்படைத்த பயனுய் உலகில் பிர்ம்மசொரூப மென்று, எதைக் கூறிவரு கின்றூர்களோ, அந்தமனோவாக்கிற் கெட்டாத பூரணமான ஆத்மாராமனை உண்மையில் காணவேண்டுமானுல், உப்ப ரிகைக்குச் செல்ல படிக்கட்டுகளைத் தாண்டவேண்டுவது போல வேதாகம புராணங்கள் கூறுவதை அனுசரித்துச் சோபானமாய் முன்னணியாயுள்ள நிஷ்காமிய கர்மங்களி லும், நிஷ்காமிய பக்தியிலும், ஈடுபட்டு அதன் பலனுன சித்த சுத்தியும் சற்குருலாபமுங் கிடைக்கப்பெற்று இடை விடாத சிரவண மனனங்களை யாதோர்தடையுமின்றி சிரத்தாபக்தியோடு செய்யவேண்டும். அவ்வாறு ஈடுபட்ட வர்கட்கே அவனைக் கண்டறியக்கூடும். மேற்கூறிய முறை யை அனுசரிப்பதுதான் சாஸ்திரங்களின் கருத்திற்கும், சான்றோரனுபவத்திற்கும், ஒத்ததாயிருக்கிறது. எங்ஙன மெனில் ஒருவன் முட்டாளாகவிருந்து மேல் வகுப்பையே முதலில் படிக்கவேண்டுமென்றிச்சிப்பதைவிட புத்திசாலி யாக முறையே கீழ்வகுப்பில் படித்துத் தேறிவருவதால் பின்னொருகாலத்தில் அவனே மேல் வகுப்பிற்கு யோக்கிய முற்றவனுவன் என்பதில் சந்தேகமேயில்லை. அதுபோலவே அனுபவமும் சித்திக்கும், ஆனுல் இம்முறைகளைச் சற்குரு வால் ஐயந்திரிபின்றித்தெரிந்து கொண்டாலன்றி நாம்

கடைத்தேற முடியாதென்பதை விளக்கவே சற்குருவின் பிரபாவத்தை உலகத்தோர்க்குக் காட்டவேண்டிப் பரமேஸ்வரன் தன் புத்திரனான சண்முகனிடம் உபதேசம் பெற்றுக் கொண்டார் என்பதின் தாற்பரியம் என்னவெனில் கைலாயகிரியில் நந்தி, ஸ்கந்த, கணேசாதிகள் விளையாடிக் கொண்டிருக்கும் சமயம் சத்தியலோகாதிபனான பிரம்ம தேவன், சங்கரனைத் தெரிசிக்க சன்னிதியைநோக்கிச் சென்றான். அதைப்பார்த்த ஸ்கந்தன் தமையனான கணேசனிடம் அண்ணா சிசுவாச்சல்யம் இன்னதென்றறியாத மூடனொருவன் நம் தந்தையைக் காணச்செல்கின்றானே அவன் யார் யென்பதைத் தாங்களேனு மறிவீர்களோ அவனை இங்கே அழையுங்களென்று பிரார்த்திக்க அவ்விதமே அவரு மழைக்க அருகில்வந்தான் பிர்ம்மதேவன். காலாடிபெற்ற அறுதலையான கார்த்திகேயன் பிர்ம்மாவைப்பார்த்து காலகாலனைக் காணச்செல்லும் தாம் யார் என்றுகேட்க, நான் தான் பிர்ம்மா என்றான். உமக்கு என்ன தொழில் என்று குகன் கேட்க, சிருஷ்டித்தொழில் என்றான் வேதன். சிருஷ்டியை எவ்வாதாரத்தைக்கொண்டு நடத்திவருகின்றீரென்று குழந்தை கேட்க, வேதம் வினா வேறில்லை என்றான் வாணீபதி. தாம் கூறுவதைப்பார்த்தால் தாங்கள் வேதத்தை நன்கு அறிவீர்போலும் அங்ஙனமாயின் அடியேன் செவி குளிரக் கொஞ்சம் கூறவேண்டுமென்றான் குகன். பிர்ம்மனும் ஓம், என்றெடுத்துச் சாந்திஹி என்று முடித்தான். ஐயா தாம் கூறிய வேதப்பகுதியில் முதன்மையாயுள்ள ஓம் என்னும் பிரணவத்திற்குப் பொருள்யாதோ என்றான் சத்திவேலன். அகார, உகார, மகாரமாகிய மூன்று எழுத்தால் ஆக்கப்பட்ட மகாமந்திர மென்றான் பிர்ம்மன். ஐயா தோன்றியபடியெல்லாம் பொருள் கூறப்புகுந்தால் நாணமுறும்படி நேரிடும். தாம் யார் யெனக்கேட்ட

பொழுதே நான் பிர்ம்மா என மார்தட்டிக் கூறியது ஞாபக மிருக்கலாம் அந்த நான் என்பது தட்டிக்காட்டக் காரண மாயிருந்த கையா, அல்லது மார்பா, இன்றேல் கூறிய வாயா, மற்றும் எண்ஜாண்களேபரமா, முதலிலேயே நான் என்று கூறி ஓர் பிழை புரிந்தீர், அது யார்க்கும் சகஜமெ னப் பொறுத்தேன்; பிறகு ஓமென்றெடுத்துச் சாந்திஹி என்று முடித்திர் வாக்களவில் சாந்திஹி என்று கூறினீரேயன்றி, நீர் செய்த வியாக்கியானத்தால் என் மனம் சாந்தியடைய வில்லையே, அரிஓமென்ற இருபதங்களின் உண்மையைக் கூறுதவரையில் உம்மை லகுவில் விடேனென்ருன் வரசிகிவாகனன். பார்வதி நந்தனு நான் முன் கூறிய பொருளைத்தவிர்த்து அப்பதத்திற்கு வேறுபொருள் கூற எனக்குத்தெரியாது என விழித்தான். அரிஓமென்னும் பதத்திற்குப் பொருள் அறியாப்புல்லறிவோய்! உமக்குப் பரமன் அவையில் என்னவேலை ஆறுங்கடந்த பூரணமாம் பிர்ம்மசொரூப தரி சன அஸ்பதமான பிரணவார்த்தத்தைப் பகிரங்கமாய்க் கூறக்கூடாதது என்ற முறையில் ஆறுங்கடந்த பிர்ம்மரந் திரஸ்தானத்தில், குட்டாய், குட்டால், குட்டித் தெரிவித் தான் குகன்; இத்துடன் நில்லாது இம்மூடனை வெளியில் விட்டால் மீண்டும் மீண்டும் முட்டாள் பிரபஞ்சத்தையே சிருஷ்டிப்பான் என்றெண்ணிச் சிறையி லு மிட்டான்; சிறையிலிட்ட தன் தாத்பரியம் என்னவெனில், தான் கூறிய உபதேசத்தை அநுசந்தானம் செய்யக்கொடுத்த காலமென்றே கூறலாம். பிரமனைச் சிறையிலிடவே சிருஷ் டித் தொழிலுக்கு நாதனற்றுப்போக. ஸ்கந்தகிரியில் ஷண் முகன் தானே அமர்ந்து அத்தொழிலைச் செய்ய முற்பட் டான். குழந்தை செய்யும் களிமண் பாத்திரங்கள் பாகஞ் செய்வதற்குப் பிரயோஜனப்படாதது போல ஸ்கந்தனென குழந்தை செய்யும் சிருஷ்டியும், சத்துவமயமாய்ப் போக

வே, பூமிதேவி பாரம் பொறுக்கமாட்டாமல் பரமனிடம் முறையிட, எல்லா விபரத்தையும் கேட்ட சங்கரன் குழந்தையை அழைத்து, மடிமீதிருத்தி, மலைப்பழம் அருத்தி, குமரா! வேதனை, வேதனைப்படுத்திச் சிறையிலிட்டாயாமே காரணமென்ன என்று கண்ணுதற்கடவுள் கேட்க, அப்பா அவன் சாதியில் குயவனும் தங்கள் சன்னிதியை நோக்கி வந்தான் அண்ணவும் நானும் ஆடிப்பாடிக்கொண்டிருந்தோம், எங்களை அணுவளவும் கவனியாமல் அவன் நேராக வரவே குழந்தை வாச்சல்ய ருசியறியாத அவனுக்குக் கருணை வள்ளலான தங்கள் முன்னே என்னவேலையோ வென எண்ணி அழைத்தேன். அருகில் வந்தான்; தாம் யாரென்றேன்; வேதன் என்றான்; தொழிலென்ன வென்றேன் சிருஷ்டி யென்றான்; ஆதாரமென்ன வென்றேன் வேதாகமங்களென்றான்; வேதம் நன்கறிவானென வெண்ணிக் கூறச்சொன்னேன்; ஓம் என்றெடுத்து ஏதேதோ பிதற்றினான்; பிரணவப்பொருள் என்னவென யான் வினித்தேன்; பொருள் தெரியாது அவன் விழித்தான்: அதனல் அருளில்லா அசடனென் றெண்ணி அவனைத் தலையிற் குட்டினேன் வேதனையடைந்து துடித்தான், பிறகு பொருள் கூறி மென்சிறையிலடைத்தேன்; இதுவே உண்மையில் நடந்த செய்தியாகும். இக்காட்சிகளைக் கண்டதற்குக் கணபதியேசாட்சியெனக்கூறிநின்றான் ~~அழகேந்தியகையன்~~ சேமான், கண்மணி! அயனறியாத அம்மந்திரப் பெருமையை நீ அறிவையோ என்றான். உடனே - ஆறுதலையப்பன் அறிவேன் அறிவேன் நன்கறிவேனென்றான். பரமன் அங்ஙனமாயின் நீ எனக்குணர்த்துவையோ என்றான். கூறுவதற்குத் தடையில்லை; "குருவமர் பீடத்திற் குழந்தையான யான் அமரவும், அறிவுடைச் சீடன் அம்கரம் பொத்தி அடிமலர் போற்றி நிற்பது போல் தாம் நிற்கவும் நேர்ந்தால், அக்கரப்பெருமையை அக்கணமறைவேன்" என்றான். அவ்

விதமே இன்றும் ஏரகப்பதியில் தாரகப்பொருள் கூறிய முறையில் குழந்தை குமரேசனை தகப்பன்சாமி யெனக் கூறி வருவது யாரும் நன்கறிந்ததே. புராணரகஸ்யமிவ்வாறி ருக்க, அந்தரார்த்தமாவது, ஒவ்வொருவரும் தன்னைத் தான் பார்க்க அறிந்துகொள்வதற்கு ஞானசற்குரு அனுக் கிரகத்தாலன்றி முடியாதென்பதை அறிவுறுத்த, பரமன் தன்னுள் தானாய் முளைத்த தன்முகத்தையனான ஷண்முகத் தப்பனை வலது தோள்மீதமர்த்திக் குழந்தை முகம் நோக்கி நின்றான்: என்பதே உண்மையாய் முடியும். ஆகவே சங் கரனும் காரணார்த்தமாகவேனும், ஓர் குருவை அமைத் துக் கொண்டாரென்றால் குருவில்லாவித்தைபாழ் என்பது நிதர்சனமாய் முடியும். அன்றிப் புருஷோத்தமனான இரா மச்சந்திரமூர்த்தியும் பிரம்ம ரிஷியான வசிஷ்ட மகரிஷி யிடம் உபதேசம் பெற்றுக்கொண்டாரென்பதின் கருத்து மிதுவே; அதனாலேயே சற்குருவான ராமாநந்தரிடம் கபீரும், ராமகிருஷ்ணபரமஹம்சரின் அனுக்கிரகத்தால் நரேந்திரரான விவேகாநந்தரும், கோவிந்தபாதாசாரியா ளுடைய அனுக்கிரகத்தால் சங்கரரின் அவதாரமான சங் கர பகவத்பாதாளும் நமக்குச் சாட்சியாயிருந்து குருகிரு பையின் பிரபாவத்தை விளக்கிக்காட்டியிருக்கின்றார்கள். குருப்ரசாதத்தையடைய வேண்டிக் கீதாசாரியனான கிருஷ் ணபரமாத்மாவும் சாந்தீப முனிவருக்காகக் காடுசென்று விறகுவெட்டிச் சுமந்தாரென்றால் குருகிருபையை எளிதா ய்ப்பெறக்கூடியதல்ல, குருவனுக்கிரகம் அவ்வளவு மேன் மையுடையதாயிருக்கிறது; ஆனதால் மழைத்துளியை எதிர்நோக்கிப் பறக்கும் சகோரப்பக்ஷியைப்போல் ஆசாரி யனைத்தேடி அவரடிகளில் வீழ்ந்து பயபக்தி விசுவாசத் துடன் நேசிக்கவேண்டியது அறிவுடையோன் கடமையா கும். அதுபோலவே குருவும் தக்க சிஷ்யனைத்தேடி அலை வார். குருவுக்குத்தக்க சீடனும், சீடனுக்குத்தக்க குருவும்

வாய்க்கும் அந்தநேரம் எந்தநேரமோ! ஆகையால் அவருடையவரவை எதிர்நோக்கி முன்னணியாயுள்ளதும் சோபனமான அவரவர் மதக்கல்விகளான புராணதிஸிரவணமும் நிஷ்காமிய பக்தியோடு மூர்த்திதலம் தீர்த்தங்களையும் சாதுசங்கங்களையும் தரிசித்து வந்தால் சகுணம் மாற்றிநிற்குணம் நாட்ட சற்குருவும் வருவார்; அருள் தருவார்; நேரமும் கோலமுமறியா நிலையில் கண்முன் பிராப்தமாகக்கூடிய குருவை இவர்தான் நமக்குக்கெதியளிக்கவந்த ஈஸ்வரன் எனக்கருதும் பக்குவம் நமக்கு பேற்கூறிய முறைகளாலேயே கிடைக்கும்; ஆனால் உழுது பரம்படித்த வயலில் விதைத்த நல்விதையானதுஎவ்வாறு திருப்திகரமான பலனைத்தருமோ அதுபோலச் சரியான நிலைமையில் நம்மை நாம் வைத்திருந்தால் சற்குருவினுபதேசமும் நம்மை நமக்களிக்கும்,

## குருநாதன் திருவடி அருள்போதந்தருமுடி.

இப்பாரிலென் பிழைகளெல்லாம் பொறுத்தருளென்
னப்பா நின்னருட்கேயடைக்கலங்காண் இப்பாரில்
நாவினது தாள் நீழல் நண்ணுமட்டும் நின்னடியார்
பாவினது சீர் கேட்கப்பண். (இராமலிங்கவள்ளல்)

மெய்விடா நாவுள்ள மெய்யருளிருந்து நீ
மெய்யான மெய்யை எல்லாம்
மெய்யனவுணர்த்தியது மெய்யிதற் சையமில்லை
மெய்யேது மறியாவெறும்
பொய்விடாப் பொய்யினேனுள்ளத்திருந்து தான்
பொய்யான பொய்யை யெல்லாம்
பொய்யென்னவண்ணமே புகலவைத்தாயெனிற்
புன்மையேனென்செய்குவேன்
மைவிடாதெழு நீலகண்ட குருவே விஷ்ணு
வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக்குருவே
மதங்கடொரு நின்றகுருவே
கைவிடாதே யென்றவன் பருக்கன்பாய்க்
கருத்தூடுணர்த்து குருவே
கருதரிய சிற்சபையிலானந்த நிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (தாயுமானவர்.)

# பிரணவார்த்த சாரம்.

ஹரிஓம், என்னும் வாக்கியத்தின் அர்த்தமாவது பாபங்களை அரிக்கப்பட்ட பகவானுக்கே, ஹரி என்றும், அப்பகவானே பிரணவஸ்வரூபி என்றும் சொல்லப்படும் பிரணவமென்பது, அகார, உகார, மகாரமென்னும் திரியாக்ஷரங்கள் கூடிய ஓங்காரமென்றுரைக்கத்தகும். இதனர்த்தம் பூரண பிரம்மக் ஞானிகளுக்கன்றி மற்றவர்களுக்குத் தெரியாது. பிரம்மமே ஓங்காரமென்று வேதங்கள் முறையிடுகின்றன. பிரணவத்தினிரகசியந் தெரியாதவர்கள் சகல வேதாகம சாஸ்திரார்த்தங்கள் அறிந்தவர்களானாலும் ஒன்றும் அறியாதவர்களேயாம். பிரணவத்தின் மர்மமறியாதவர்கள் பிரமைக்குள்ளானவர்களேயாம். பூரண பிரம்மக்ஞானியாகிச் சாக்ஷாத்காரத்தையடைந்த சத்குரு கிருபையாலன்றிப் பிரணவார்த்தம் தெரிதல் வெகுதுர்லபம். வேதாகம சாஸ்திரங்களெல்லாம் ஓங்காரத்தினாதாரத்தினாலேயே பிரகாசிக்கின்றன. வேதத்தினுடைய சாரம் பிரணவமென்றே யுரைக்கத்தகும்; சர்வசிருஷ்டிக்கும், ஆதாரமாயும் ஆதேயமாயுமிருக்கின்றது; மூலாக்ஷரமென்றே சொல்லப்படும்.

பிரணவத்தின் மர்மமறிந்தவனே சுக்ஞானி யாகும்; சகல மந்திரங்களுக்கும் உயிராயிருக்கின்ற மூலாக்ஷரத்தின் மர்மமறியாமற் செய்யும், ஜெபம், தபம், யோகம், தியானம், வேதாத்தியயனம், வேதாந்தசிரவண நிதித்தியாசனம் முதலியன வீண்முயற்சியாய் முடியும். ஓங்காரம் சமுத்திரமாகும், வேதாகமங்கள் நுரைகளாகும்; பலபல வித்தைகள் பதார்த்தங்களாயும், ஓங்காரம் லவணமுமாயிருக்கின்றது. ஓங்காரத்தினிரகசியந் தெரிந்தவர்களே பூத

பவுஷிய வர்த்தமான மென்னும் திரிகாலங்களையறிந்த பிர்ம் மக்ஞானிகளென்றுரைக்கலாம். பிரணவார்த்த சோதனை யினாலேயே அஞ்ஞான சந்தேகவிபரீதம் சாஸ்திரவாசனை, லோகவாசனை, தேகவாசனை முதலானவைகளும் நிவாரண மாய்த் திடப்பிரக்ஞை யுண்டாகவேண்டும். அஷ்டாக்ஷ ரத்துக்கும், பஞ்சாக்ஷரத்துக்கும் பிரமானவலிமை யுண் டாக்குவது பிரணவமேயாம்; விருக்ஷங்களுக்குச் சலமும், ஸ்திரீகளுக்குக் கற்பும், புருஷர்களுக்கு விவேகமும், மேடை களுக்கு அஸ்திவாரமும் எப்படி ஆதாரமாயிருக்கின்றதோ அப்படியே சமஸ்தமந்திரங்களுக்கும் பிரணவமே ஆதார மாயிருக்கின்றது. தானும் பிரம்மம் ஜெகத்தும் பிரம்மம் என்னும் திடம் எவனுக்கு வந்ததோ அவனே பிரணவத் தின் உண்மையான அர்த்தமறிந்தவனும்; புத்திவந்தனென் றும் யுத்திசாலியென்றும் விற்பன்னனென்றும், ஸூக்ஷம வென்றும், சிரேஷ்டனென்றும், பண்டிதனென்றும், பக்த னென்றும், முக்தனென்றும், சித்தனென்றும், சுத்த னென்றும் பிரணவார்த்த மறிந்தவனையே சொல்லவேண் டும். பிரணவ பாவமறிந்தவனொருவனே பிரமத்தில் ஏகீவ பாவமாயிருப்பான். மற்றவர்கள் மாயையிற் சிக்கினவர் களாம்.

பிரணவானுபவ மறிந்தவனே பிராந்திரகிதனென்றும், பிராமணனென்றும் சொல்லப்படுவான். பாலுக்குள் வெண்ணெய் போலவும், எள்ளுக்குளெண்ணெய் போலவும், பரிபூரணமாயிருக்கும் பரப்பிரம்மத்துக்கு லௌகீக பாவ மாயிராது வெதிருத்தமாயிருப்பதே பிரம்மஹத்தியென் றும் பெரியோர்களுரைப்பார்கள். மாதா பிதாக்களுக் கைக்கியமாயிராமல் மாறுபட்ட தநயன் அபராதியானது போலப் பரப்பிரம்மத்துக்குள் ஐக்யமாய் நான் என்பதரு அகங்காரக்கிரந்தியுள்ள அபராதிக்கு விபரீத குணங்க

ளுண்டாகிப் பிரம்மத்துக்குத் தவிரா விரோதியாய் மூவர், தேவர், முனிவர்களுக்கும் விரோதியாய் குரோதமோருருவாயிருக்கும் ஜீவனே தானுகி ஜெனனமரணத்தரங்கக் கணங்களிருக்கும் பவசாகரத்துளோர் திரணமாய் விழுந்து கரையேறுவதற்கோர் துறைகாணுமல் கற்பாந்தகாலங்கள் பல கடந்தாலும் தனக்குச்சலனமும் துன்பமும் நீங்காமல் மேற்படி தரங்கங்களெவ்வெத்திசைகளில் தாவுகின்றனவோ அவ்வத்திசைகளிலுழன்றலைந்து நிலைகலைந்து இன்பங்குலைந்து யாதொன்றுந் தோன்றுமலலைந்து அந்தகாரத்தில் அமிழ்ந்திருப்பான். அன்றி மாயை என்னும் கன்னிகை விளையாடுவதற்கோர் பந்தாய் நைந்து மிகவும் நொந்து சிந்தாக்கிரந்தனுய்ப் பந்தத்தாற் பிணிக்கப்பட்டு ஞானஸ்மரணை கெட்டு மோக்ஷமார்க்கம் விட்டு தொன்று தொட்டுப் பிர்மப் பிரளய பரியந்தம் சுழல் காற்றிலகப்பட்டு இலவம் பஞ்சு போலவும், சூழ்ந்தெரியும் வன்னியின் மத்தியிலுற்ற பன்னகம் போலவும், இருபுறமுமெறியு் குழாயினுள்ளிருக்கும் எறும்புபோலவும் உழன்று உழன்று அலக்கணுற்று இடரடைந்து இறுதியில் நிரையத்துக்காளாவான். மூன்றரை மாத்திரையான ஓங்காரத்தினம்ஸமான அகாரம் சாக்கிராவஸ்தையென்றும், பிர்ம்மதேவனென்றும், சிருஷ்டியென்றும், நாதமென்றும், ருக்வேதமென்றும், மிர்த்தியலோகமென்றும், மனதென்றும் சொல்லப்படும்; உகாரம் சுவப்பனுவஸ்தையென்றும், விஷ்ணுவென்றும், ஸ்திதியென்றும், பிந்துவென்றும், எஜுர்வேத மென்றும், சொர்க்கலோகமென்றும், புத்தியென்றும் சொல்லப்படும்; மகாரம் சுழுப்தியவஸ்தையென்றும் ருத்திரனென்றும், சம்ஹாரமென்றும், கலையென்றும், சாமவேதமென்றும், பாதாளலோகமென்றும், அகங்காரமென்றும் சொல்லப்படும்; அர்த்தமாத்திரையோ துரியாவஸ்தை என்றும், ஆதிசத்தி என்றும், ஞானமென்றும், சாக்ஷி அதர்வண

வேதமென்றும், மோக்ஷலோக மென்றும், சித்தமென்றும் சொல்லப்படும். அன்றி, பிரணவத்தைப் பிண்டம் அண்டம் பிர்மாண்டமென்றும், இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞான சக்தி யென்றும், சத்வ ராஜஸ தமோ குணங்களென்றும், இளாபிங்களாசுழும் நாநாடியென்றும், கெங்கா, எமுனு, சரஸ்வதியென்றும, மனம் வாக்குக்காய மென்றும், வாணி லெக்ஷ்மி, பவானி என்றும், ஆதிமத்யாந்தமென்றும். மாதாபிதா குருவென்றும், ஆகாம்ய சஞ்சித பிராப்த மென்றும், ஆதியாத்மீக ஆதிபௌதிக ஆதிதெய்வீக மென்றும். சந்திர சூரியாக்னியென்றும் சொல்லப்படும். அல்லாமல் மனசு என்பதில் ம—என்னும் தமோகுணமும், ந—என்னும் ரஜோகுணமும், சு—என்னும் சாத்விககுணமும் அடங்கியிருக்கின்றது. இதனுல் தொண்ணூற்ரூறு தத்துவங்களாகிய ஒவ்வொன்றில் திரியக்ஷராதிபதிகளாகிய திரிமூர்த்திகளுமிருந்து தங்கள் தொழிலே இயற்றுவார்கள். திரிமூர்த்திகளுக்காதாரமான திரியக்ஷரங்களில்லாத வஸ்து, எவ்வுலகத்திலும் எக்காலத்திலும் இல்லேயென்றே சொல்லத்தகும்.

அல்லாமல் அகாரம் ஸ்தூலதேகமென்றும், உகாரம் சூட்சமதேக மென்றும், மகாரம் காரணதேகமென்றும் அர்த்தமாத்திரை மகாகாரண தேகமென்றும் சொல்லப்படும். மூன்று தேகங்களுக்குச் சாக்ஷியான மகாகாரணமே பிரத்யேகாத்மாவென்றும், ஆனந்தமென்றும், அனுதி காரணமென்றும், அசியென்னும் ஐக்ய பாவத்தை அளிப்பதென்றும், நித்ய சத்தியவஸ்துவென்றும், நிர்வாணபத மென்றும், சஞ்சுக்தயோகீஸ்வரர்களுரைப்பார்கள். துரியராணியோடுங் கூடிச்சுகித்திருக்கும் ஆத்மாராமனைத் துரீயாதீதனென்றும், பரமாத்மாவென்றும், பராத்பரனென்

றும், பரிபூரணனென்றும், பரமேஸ்வரனென்னும், பகவா னென்றும், சொல்வார்கள். ஆனால், துரியராணியே ஆனந்தமென்றும், ஆனந்தத்தையனுபவிப்பவனே ஆத்மா ராமனென்றும் உரைக்கத்தகும், அர்த்தமாத்திரையான மாயையுடன் மற்ற அர்த்தமாத்திரையாய் அவாங்மனோ கோசரமாயிருக்கும் பிர்மம் கூடிப்பலப்படாமலே ஓங்காரத் துக்கிடங்கொடுத்திருக்கின்றது. நிச்சப்தமான பிரம்மத் திலிருந்து ஓங்காரமுண்டாயிற்று. அதிற் சப்தமும், பத மும், வாக்கும், வார்த்தையும், சுலோகமும், வேதாகமும், உண்டாயிற்று. வேதாகமங்கள் வாச்சியார்த்தமென்றும், ஓங்காரம் லட்சியார்த்தமென்றும் பெரியோர்களுரைப்பார் கள். வாசாக்ஞானிக்கு லக்ஷியார்த்தம் தெரியாததுபோல ஜாக்கிரதஸ்வப்பன சுழுப்தியின் அனுபவமுரைக்கவே சென்று துரியானுபவ முணர்தல் அதிதுர்லபமென்றுஞ் சொல்லவேண்டும். அகாரத்தில் நரரும், உகாரத்தில் சுர ரும், மகாரத்தில் இராக்கதரும், அர்த்தமாத்திரையில் ஞா னிகளும் உற்பத்தியானார்களென்று வேதங்கள் முறையிடு கின்றன. திரிமூர்த்திகளாகுதல் அரிதல்ல. பிர்மக்ஞானி யாதலே அரிதென்றுரைக்கத்தகும். அன்றி, ஓங்காரம் சகுணப்பிர்மமாகவும், நிர்க்குணப்பிர்மமாகவுமிருக்கின்றது.

எப்படியெனின்? ஓம் நமோநாராயணாய, ஓம் நமசி வாய வென்னும் சகுணப்பிர்மமான பிரதான மந்திரங்க ளுக்காதியிலிருக்கின்றது. ஓங்காரமேயாம். ஓங்காரத்தை உச்சரிப்பவன் திரிமூர்த்திகளையும், ஆதிசக்தியையும் பரப் பிர்மத்தையும் நினைத்ததாகும் நிர்க்குணமர்மமான அம் ஸோஹம் என்னும் அஜபா மந்திரமே அர்ச்சுனா! நீ ஜெ பிக்கத்தகுந்த தென்று பகவானும், சிவோஹம் என்னும் அத்வைத மந்திரமே ஸ்ரீராமா நீ ஜெபிக்கத்தகுந்த தென்று வசிஷ்ட பகவானும், போதித்த மஹாவாக்கியங்களில் ஓங்

காரமே ஆதாரமாயிருக்கின்றது. ஓம் என்னும் பிரணவ வத்தினர்த்தம் இன்னஞ்சொல்லப்புகின்—ஓ—அதுவென் னும் பிரம்மமே, அம்—நானென்னும், நிர்குண பிர்ம்ம ஐக்கியத்தைக் காட்டும் அத்வைத பாவமாயிருக்கின்றது. எல்லாவற்றிற்கும் ஓங்காரமே பிரதானமாயிருக்கிறது. சரீ ரத்துக்குப் பிரதானமான மஸ்தகமே பிரமாணமாக இருக்கின்றது. எப்படியெனில் ஆதியில் பிர்மாவான பரப் பிரம்மத்திலிருந்து முதன் முதல் ஓங்காரமுண்டாயிற்று ஆனபடியால் நாமும் ஓங்காரத்தையே ஆரம்பத்திலுண் டாக்கவேண்டுமென்று ஓங்காரஸ்வரூபமாய் மஸ்தகத்தை யுண்டாக்கிக் களிப்புற்றுப் பின்பே மற்ற அவயவங்களைச் சிருஷ்டித்திருக்கிறார் என்பதே போதுமான சான்றாக இருக்கிறது

ஆகவே, எவரெவர்கள் எவ்வெத்தெய்வங்களை உபா சித்தாலும் நாமங்களைச் சொல்லி ஸ்பரித்தாலும் அது பிர ணவார்த்தப் பொருளாம். ஏகமான கடவுளைச் சார்வதே யல்லாமல் அதில் பேதபுத்திகொண்டு துவேஷித்துத்திரிவ தே தொழிலாக மேற்கொள்ளாதிருக்கவே கீதை முதலிய பிரபல சுருதிகள் கோஷிப்பதையே இங்கு பிரணவார்த்த சாரமென்றுவரைய நேர்ந்தது. இதுவே வேதாநுசார மாகும்.

காதலாகிக்கசிந்து கண்ணீர்மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதநான்கினும் மெய்ப்பொருளாவது
நாதநாமம் நமசிவாயவே.

———

கண்ணன் கழலிணை நண்ணுமனமுடையீர்
எண்ணுந்திருநாமம் திண்ணம் நாரணமே

என்ற இவைபெயரால் இரண்டாயினும் பொருளால் ஒன்றேயாம் என்பதற்குப் பிரமாணம்.

அரன் நாரணன் நாமம் ஆண்விடை புள்ளூர்தி
உரைநூல் மறையுறையும் கோயில்-வரைநீர்
கருமமளிப்பழிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரிகார் மேனியொன்று.

(போய்கையாள்வார்)

---

## பக்தியே முக்திக்குச் சாதனம்.



கிடைத்தற்கரிய மனிதசென்மத்தைப் பெற்ற ஒவ்வொருவரும் கடவுளை வழிபடல் வேண்டுமென்று வேத முதல் சகல சாஸ்திரங்களும் அறிவுறுத்தும் தாக்பரிய மென்னவென்றுராய்வோம். எல்லாச்சீவர்களின் உத்தேச மென்ன ? எப்பொழுதும் சுகமாயிருக்கவேண்டுமென்பதே! ஆனால் எப்பொழுதும் சுகமாயிருக்கிற ஓர் வஸ்து கிடைக்கப்பெற்றால் அதினின்றும் பிரியம் மாறுதிருக்கலாமே எனின் நாம் என்ன சொல்வோம் ? ஆம் அதுவேதான் வேண்டுமென்போம் அங்ஙனமாயின் அவ்வஸ்து ஏகமாயிருக்கும் கடவுளையன்றி வேறு பொருள் இல்லை என்று பெரியோர் கூறுகின்றனர். அப்படியானல் அவரை எப்படி அடையப்பெறுவது என்கின்ற சங்கைவருகிறபொழுது, அவர் உன்னிலேயே பிரியவடிவராய் அதாவது அன்புருவராய் இருக்கிறார்; அவரைப் பக்தி, அல்லது அன்பு, என்னும் வகையினலே அதாவது அன்பைக்கொண்டே அன்பை அடையவேண்டும்; அதெப்படி என்று விசாரிக்கமுற்பட்ட அவசரமே சாதனமாயிருந்து சாத்தியமாகும்.

மாருத்திருப்திவடிவராய கடவுளை அடையப் பெறுகிறோம் அதனாலேயேதான் பக்தியே முக்திக்குச் சாதனமெனச் சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன.

ஆனால் பரமாத்மாவினும் பின்னப்படாத (பிரியமே) அதாவது ஆனந்தமே வடிவாயிருக்கும் தானுதும் ஆத்மா வில் மீக்குற்ற பிரியம் ஜீவர்களுக்கு அனுபோகமாயிருக்க அதைமறந்து தனம், மகன், உடல், புறக்கரணம், அகக்கரணம், உயிர் இவைகளில் மிகுந்த பிரியத்தை (அன்பை) வைக்கக்காண்கின்றோம். ஆயின் அப்பிரியம் நிலைபெற்றிருக்கின்றனவா என்று உலகானுபவத்தில் நாம் கவனிக்கின் அவை நிலையற்றனவாகவே முடிகின்றன. எங்ஙனமெனில் ஒருவன் தன் வீடு பற்றிஎறிவதை அசநியிற்கான முன்னர் தன் பணப்பெட்டியை எடுக்கத்துணிவன். அது கூடாவிடில், தொட்டிலுறங்கும் தன் மகனை எடுக்கத் துணிவன் அதுவும் கூடாவிடில், தன் உடலைப் பாதுகாக்கத்துணிவன். அதுவும் கூடாவிடில், கண் முதலிய பொறிகட்கு இடையூறு வாராமல் காப்பாற்றிக்கொள்ளத்துணிவன். அதுவும் கூடாவிடில், மனம் முதலிய அகக்கரணங்களுக்கு இடையூறுவராது காக்கத் துணிவன். அதுவும் கூடாவிடில், தன்னுயிரையேனும் காக்கத்துணிவன். கூடாவிடத்தில் முடிவில் மஹாமுக்கியமாகும் தானாகிய ஆன்மா இடையூறெய்தாது காக்கத்துணியாநிற்பன். எனவே பிரியவடிவமே, தானாகும் ஆத்மாவைவிட்டு மேற்சொன்ன அனாத்ம பதார்த்தங்களைத்தானென்று அபிமானித்து அவ்வஸ்துக்களே சுகத்தைத்தருகின்றன என்ற சத்தியபுத்தி அகலாமல் அவைகளில் அன்பைச் செலுத்துகிறவரையில் கடவுள் நிலை நமக்குக்கிட்டுவதின்றாம். எனவே எப்பொழுதும் எல்லோரும் வேண்டும் சுகசொரூபம் யாதென ஊன்றி உணர்வோர்க்குக் கடவுளின் உண்மை

நிலையும், அவரினும் பின்னமற்ற சாக்ஷியாகிய நமது ஆத்ம சொரூபம் ஆனந்தமே வடிவாய் இருத்தலால், தனது உண்மைச்சொரூப நிலையை அறிவதே எப்பொழுதும் சுகானுபவவாழ்க்கையான கடவுள் வாழ்க்கையென்றும் அதனாலேயே கடவுளை வழிபடல் வேண்டுமென பக்திநிலையை (அன்பு நிலையை) வேதமும் சான்றோரும் அறிவுறுத்தியதின் தாத்பரியமாம்.

இஃதன்றி கடவுள் வேறு. அன்பு செலுத்தும் நாம் வேறு என்பதாகக்கொள்ளின் அவ்வன்பு பிரிபட்டுப்போய் விடும். ஏனெனில் பரமாத்மாவைத் தனக்கன்னியமாய்ப் பாவித்துத் தானொருகாலத்தில் பிரியம் வைப்பதென்றால் அவை மற்றுமொருகாலத்தில் எடுக்கப்பட்டுவிடும். ஆனால் தானாகும் அறிவும் தன்னினும் பின்னப்படாத பரமாத்மாவாகும் ஆனந்தமும் வேறாக இருந்து கூட்டவும் பிரிக்கவும் கூடாததாயிருக்கிறது. ஏனென்றால் அறிவே ஆனந்தம் ஆனந்தமே அறிவாய் இருத்தலால், பிரியமென்பதை (அன்பை) வைத்தல் எடுத்தல் என்ற கிரியாபாகம் கூடாததாயிருக்கிறது. இது, வேதப்பிரமாணமாகும்.

மற்றும் பெரியாழ்வாரால் "அடியோமோடும், நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" என்றும், அப்பர் சுவாமிகளால், "ஏற்றாயடிக்கே யிரவும்பகலும் பிரியாது வணங்குவனெப்பொழுதும்" என்று ஈண்டுக்கூறிய அருள் மொழிகளும்,

அன்பு சிவமிரண்டென்பரறிவில
ரன்பே சிவமாவதாரு மறிகில
ரன்பே சிவமாவதாரு மறிந்தபி
னன்பே சிவமாயமர்ந்திருப்பாரே (திருமூலர்)

அன்பெனும் பிடியுளகப் படுமலையே
யன்பெனுங் குடில்புகு மரசே
யன்பெனும் வலைக்குட்படு பரம்பொருளே
யன்பெனுங் கரத்தமர் முதே
யன்பெனுங் கடத்துளடங்கிடுங் கடலே
யன்பெனு மனுவுளா ரொளியே
யன்பெனு முயிரொளிர் தருமறிவே
யன்புருவாம் பரசிவமே.

(திருவருட்பா)

எனக்கூறியிருப்பதும் நன்கு விசாரித்து உணர்தற்பாலனவாம். எனவே இத்தகைய மெய்ப்பொருள் விளக்கத்தைத் தக்கோரால் (பரமாசாரியனால்) சங்கையறத்தீர விசாரித்தறிந்தவர்கட்கே "அங்கிங்கெனுதபடி" எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாயிருக்கும் பரமாத்மாவினும் பிரிபடாது அவஸ்தாத்திரயங்களிலும் நான் நான் (அகம் அகம்) என்று ஜெபியாமல் ஜெபித்துக் கொண்டிருக்கிற ஜீவத்துவத்துக்கும் விலக்ஷணமாயிருக்கும். அந்தர்யாமியான சச்சிதானந்த வடிவ ஆண்டவனின் அன்புவடிவமே தானென்பது நன்கு விளங்கும். இதுவே பக்தி என்னும் சொல்லுக்கு சம்பூர்ண அர்த்தமாம். இஃதன்றி உலக வாழ்க்கையில் ஒவ்வொருவரும் கொள்ளக்கூடிய இன்பம் யாதெனக்கவனிக்கின் அரோகதிடகாத்திரம், தன்னம்பிக்கை, தைரியம், வீர்யம், கல்வி, புகழ், பொருள், உயர்ந்த பதவி, அதிகாரம், அதிசௌந்தர்யமுள்ள மனைவி, ஏவலாளர் ஆகிய இவைகளைப் பெற்றிருக்கும் பூமண்டலாதிபதியொருவன் அனுபவிக்கும் இன்பமே மேலானதென்று கூறுவர். அதனினும் நூறுமடங்கு உயர்ந்ததாகும் கந்தர்வலோகானந்தம். அந்த கந்தர்வானந்தத்தினும் நூறுமடங்கதிகமானது தேவர்கள் அனுபவிக்கும் தேவானந்

தம், இவ்விதமாக ஆனந்தானுபவத்தின் உயர்வை விவரித்துக்கொண்டே சென்று முடிவில் பிர்மானந்தந்தான் அதி உயர்ந்ததெனவும் இப்பிரமானந்தம் பூமண்டலாசனும் மனிதானந்தத்திலும் பல்லாயிரமடங்கதிகமானதென்று உபநிடதங்கள் கூறுகின்றன. அக் ஆத்ம (பிர்ம்ம) சாட்சாத்சாரத்தால் ஏற்படும் ஆனந்தம் அளவிடமுடியாததாயிருக்கின்றது. ஆனால், உலகிலுள்ள சகல ஜீவராசிகளும் சுகத்தையே (திருப்தியையே) ஆனந்தத்தையே (இன்பத்தையே) தேடி அலைகின்றனவென்பதை எவரும் மறுக்க முடியாது. சகல ஜீவர்களும் மேற்கொள்ளும் எல்லாப் பாடுகளும் உழைப்புகளும் இந்த ஆனந்தானுபவத்தின் பொருட்டேயாகும். அங்ஙனமானால் மாறுபாடில்லாததும் முடிவில்லாததுமான பிரம்ம சாக்ஷாத்காரத்தால் நித்தியானந்தத்தையே ஏன் ஒவ்வொருவரும் உறுப்பாகக் கருதிக் குறைவற்ற நிறைவுடைமையைப் பெற உழைக்கின்றார்களில்லை? காரணம் விழித்தெழுந்து உறக்கத்திற்குச்செல்லும் வரையில் ஒவ்வொரு ஜீவர்களும் காண்பது என்ன எனில்? அவர்கள் தங்கள் பார்வையை எப்பக்கம் திருப்பினாலும் அவர்களுக்குப் புலனாவது பேதப்பட்ட லௌகீக வாழ்க்கையின் புகழ், பொருள், உயர்வான பதவி, அதிகாரம், இவற்றையே காண்கின்றோம். ஆதலால் உலகம் முழுவதிலும் இம்முறையையே ஒருவரைப் பார்த்தொருவர் இன்பமென்று சொல்லித் துன்ப வாழ்க்கையை நடத்த முற்படுகின்றார்கள். கடவுளைக்கண்ட புண்ணியவான்களைக்காண்பது அரிதாகவிருக்கின்றது. ஆனந்த சாகரத்தில் மூழ்கியவர்கள் என்ற உண்மையான பக்தர்கள், இவர்கள் கண்களுக்குப் புலனாவதில்லை. அதற்கு மாறாக போலியான பக்தர்களும் வஞ்சகர்களுமே காணக்கிடைக்கின்றது. சிலசமயம் அவர்களால் ஏமாற்றவும் படுகின்

ரூர்கள். இவ்வித சந்தர்ப்பங்களில் பகவானைப்பற்றியும் அவரை அறியும் விஷயமாகவும் அவநம்பிக்கை கொள்கின் றனர். அவநம்பிக்கை காரணமாக மனக்கொதிப்பு ஓர் பக்கமும் கடவுள், மனிதர், பக்தர், பகவான் இவர்களை அறவே மறுப்பது மற்ரூர் பக்கமும், கடவுளைக் கண்டு பேரானந்தம் பெறுவது என்பதும் வெறும் கட்டுக்கதை போல் அத்தகையர் மனதிற்குப்படுகின்றது. ஒரு சமயம் எவரேனும் கடவுளையடைந்தார் என்று நம்பக்கூடிய வழியில் இவர்கள் அறியப்பெற்ருல், அவ்வித பேறும் பேற்றைப் பெற்றவர்கள் மனிதவர்க்கத்துக்குப் புறம் பான ஏதோ அற்புத மனிதர்களாக இருக்கலாம் என்று எண்ணி தாங்கள் பராமுகமாக இருந்து விடுகின்றனர். தனக்கும் அவ்வித மார்க்கத்துக்கும் வெகுதூரம் என்று நினைத்து அப்பேரானந்தப் பெருவாழ்வைப் புறக்கணித்து விடுகின்றனர். கடவுளை அடைய ஒருவன் முயற்சிப்ப தென்பது மிகவும் போற்றத்தக்கது என்று சில சமயம் அவர்களுக்குத் தோற்றப்படினும், மேற்கண்ட காரணங் களால் அவ்வெண்ணமும் மாறிப்போய்விடுகின்றது. எந்த எண்ணம் ஒரு மனிதன் மனதில் அடிக்கடி எழுகின்றதோ அந்த எண்ணத்தின் வழியே அவன் செல்வான். அவ் வெண்ணமயமான வாழ்க்கையே அவனிடத்தும் அமை ந்துவிடும். எண்ணம் எதனை அடிக்கடி சிந்திக்கின் றதோ, பார்க்கின்றதோ, எதனுடன் நெருங்கிப் பழகு கின்றதோ அந்தத் தன்மையையே அடைகின்றது என்பது சர்வத்திராளனுபவம். ஆகவே, பகவானிடம் உள்ளன்பு பூண்ட பக்திமான்களைக்கண்டு அதிகமாய் அடிக்கடி பழகு வதற்குப் போதுமான சந்தர்ப்பங்கள் வாய்க்கிறதில்லை அதற்கு மாருக உலகப்பொருள்களே பெறுதற்கரியன வென்று கருதி வாழ்நாளைக் கழிக்குமவர்களே. இவர்கள்

கண்களுக்கு அதிகமாய்க் காணப்படுகின்றனர். அவர்களோடு தான் அதிகமாய் நெருங்கிப் பழக நேரிடுகின்றது. எனவே, (காட்சிக்கும், சேர்க்கைக்கும்) ஏற்ப எண்ணங்களும் செய்கைகளும் அமையப் பெறுகின்றன. ஒருவனது குணத்தை அறியவேண்டின் அவனது நண்பர் எவர் என்பதைத் தெரிந்துகொண்டால் அறியலாகும். எவ்வாறெனில் "கற்றோரைக் கற்றோரே காமுறுவ ரென்பதொப்ப" ஒத்தகுணமுடையோரே ஒருங்கு சேர்வர். சேர்க்கை வாசனை சகல வாசனைகளிலும் ஆழ்ந்து பதியக் கூடியது. சேர்க்கையின் விசேஷத்தாலேயே ஒருவன் அடைதற்கரிய மோக்ஷ நிலையை அடைய முடியும் என்று ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் தமது பஜ கோவிந்தத்தில் கூறியிருக்கின்றார்கள். அதன் தாத்பரியம் பெறுதற்கரிய மனிதஜென்மத்தில் சற்சனராம் மஹா புருஷர்களுடைய கூட்டுறவாலேயே பேரின்பம் சுலபமாய் எய்துமென்பதாகும். ஆதலால் உத்தம புருஷர்களின் சேர்க்கை நமக்குக் கிடைக்கப் பெறின் பேரின்ப வாழ்விற்குச் சேர்க்கையும் இன்றியமையாத சாதகத்தையே தரும். ஆனால் பூர்வ புண்ணிய வலியில்லாத சாதாரண மனிதர்கட்கு அவ்வித புண்ணிய புருஷர்கள் கிடைப்பது துர்லபமாக இருக்கிறது. அவர்கள் மானிட ஜென்மம் எடுத்தும் மாறாத நித்தியானந்த வாழ்வைப்பற்றிய சாஸ்திரங்களைக் கையாற்றவும் தக்கோர்பால் சென்று கேட்டுச் சிந்திக்கவும் வலியில்லாது மோக்ஷத்தை யடையவும் முயற்சி செய்யாமலும் இருக்கின்றார்கள். பொதுவாக உலக வாழ்க்கையின் சேர்க்கையால் மனிதன் பகவானை மறந்து வாழ்க்கையை நடத்துவதாகத் தோன்றினும், அவர்களால் எப்போதுமே கடவுளைவிட்டு இருக்க முடியாதென்பதோடு முற்றிலும் பகவானைப் புறக்கணித்த வாழ்க்கை

நடாத்தவும் முடியாது. ஏனெனின் உலக வாழ்க்கையில் அனுபவத்தின் மேல் அனுபவம் பெறுகின்றபோதும் சுக துக்கங்களால் மோதுண்டு அவஸ்தையுறும்போதும் உலக வாழ்க்கையின் பொய்த்தன்மை இத்தன்மையென அனுபவத்தாலறியப்பட்டு மெய்ப்பொருளாம் அழியாத கடவுளின் இருப்பினை ஒருசிறிது உணரப் பெறுகிறுன். உலக வாழ்க்கையில் பரம கஷ்ட நிலைமையுறும்போது நண்பர்களும் சொல்லாது நழுவுகின்றனர். இல்லாளும் அத்தருணத்தில் தனக்கில்லாளாகி விடுகின்ருள். தேடிய திரவியமும் கீர்த்தியும் செல்வாக்கும் சிலகாலத்தில் பயனற்றுப் போய்விடுகின்றன. வாழ்க்கையின் உழைப்பான முழுப் பலனும் ஒரு நொடிப்போதில் பாழ் பட்டு விடுகின்றது. ஒரு சமயம் உலக வாழ்க்கையே பெரும்பாரமாகத் தோன்றுகிறது. நன்மை தருமென்று எதிர்பார்த்தவை எல்லாம் ஆபத்துக்காலத்தில் நன்மை தராமல் போவதோடு தீமை புரிந்து விட்டுப்போகின்றன. ஆகவே உலக வாழ்க்கையின் அனுபவ முடிவில் மனிதன் உலகிலுள்ள எதனையும் தான் நம்பமுடியாதென்ற முடிவிற்கு வருகிறுன். இதிற் சிலர் இயற்கையில் ஏற்படும் சீதோஷ்ணங்களும் சுக துக்கங்களும் மற்றும் வருவனவனைத்தும் நன்மைக்குத் தான் வருகின்றனவென்றும், வேறுசிலர் நன்மை தீமைகளிலும் சுகதுக்கங்களிலும் இன்ப துன்பங்களிலும் உயர்வு தாழ்விலும் சமசித்தராய் இருக்கவேண்டுமென்றும் கூறுவதுண்டு. ஆனுல் அவரவர்களின் வாழ்க்கை அனுபவத்தில் இவ்வுபதேசங்கள் பொதுப்படப்பலனற்றனவாகத் தோன்றுகின்றன. மனிதர்கள் பெரும் பான்மையில் தனக்கு இன்பம் வந்துற்ற காலத்தில் அவ்வின்பத்தை வெளிக்காட்டாமல் இருக்கும்படி முயற்சிக்கலாம். ஆனுல் துன்பம் வந்துற்றபோது எவ்வளவு முயன்ருலும் முகக் குறிப்பு காட்டிவிடுகின்றது.

மனிதர்களது மனத்திலுள்ள (கவலை) வேதனை புறத்தே உள்ள முகத்தை வாடச் செய்து விடுகின்றது மக்களுக்கு உலக வாழ்க்கையில் ஏற்படும் துன்பங்கள் பேச்சளவிலோ அல்லது நாம் நம்பும் சில கொள்கையள விலோ அகலக்கூடியவையல்ல. மக்கள் பிறர்க்குண்டாகும் கஷ்ட நஷ்டங்களைப் பற்றிப் பேசுமிடத்தில் அவைகளைப் போதிய அறிவாற்றலாலும், பாதுகாப்பாலும் முன்னெச்சரிக்கையாலும் போராட்டத்தாலும், தேகசிரமத்தாலும் விடாமுயற்சியாலும், பொறுமையாலும் எதாவது ஒரு வகையால் அகற்றிவிடலாமென்ற எண்ணங்கொள்ளக் கூடும். ஆனால், அவையனைத்தும் பயன்படாததோடு தனக்கே அத்தகைய துன்பத்திலிருந்து மீட்சி பெறுவதற் கியலாது போகும் சமயம் வந்துறுமானல், அப்போது மனம் நடுங்கி பீதியுறுகின்றார்கள். மனித சக்திக்கு அதிக மான சில துன்பங்களும் வருகின்றன. அவ்வித் துன் பங்களை மனித சமூகத்தின் சக்தியுடையார் அனைவரும் ஒருங்கு கூடி முயன்றாலும் நிவர்த்தி செய்துகொள்ள முடியாமற் போய்விடுகின்றது. அத்தகைய துன்பங்களைப் பற்றி நினைக்கும்போதே உடல் நடுக்கமுறும்; அவ்வித துன்பங்களில் ஒன்று (மரணம்) சாவு. ஆயின் தன் சாவைப்பற்றி ஒருவன் கவலையற்று வாழலாம்; ஆனல் உடலிரண்டு உயிரொன்றாயிருப்பதுபோல நெருங்கிய மனைவியோ, மக்களோ, உற்றாரோ, நண்பர்களோ, இறக்கப்பார்க்க மனிதன் சகிக்கிறதில்லை. பெருங்கொலை செய்யும் கல்நெஞ்சம் படைத்த தூர்த்தனானாலும் எவரா வது ஒருவரிடம் பாசம் வைத்திருப்பான்; அது அவனது மனைவியாகவோ மக்களாகவோ அல்லது வேறெந்த உறவி னர் நண்பர்களாகவோ, அன்றி தனமாகவோ, இருக்க லாம்; தன் பாசத்திற்குப் பாத்திரான இவர்களில்

எவரேனும் ஒருவர் திடீரென அகாலமரணமுறுவார்களானல் அவர்களது கல்நெஞ்சமும் கரைந்துவிடுகின்றது. அவர்களுக்குள் தாங்கமுடியாத துக்கம் மேலிட்டு அவர்களது முழு வன்னெஞ்சமும் வேருக மாறிவிடுகின்றது. இவ்விதம் தவிர்க்க முடியாத மனிதசக்திக்கு அதிகமான ஆபத்தேற்படுங்காலங்களில் அவரவர்கள் கஷ்டத்தை அகற்ற வேறுகதியற்று நிற்கும் காலங்களில் சகல சக்திக்கும் இருப்பிடமான புராண புருஷனுக்கும் பரமாத்மாவிடம் தன் முறையை அவசியம் சொல்லியே தீருகின்ருன். உலக சிக்கலில் அகப்பட்டு உழலாத மனிதர்கள் எவருமே இல்லை. கவலையில்லாத மனிதனும் தன் வாழ்நாளில் ஒரு காலத்தில் ஏதாவது ஓர் வகையில் நிலை கலங்கி விளக்கம் பெருத தன்னையும் மீறி ஏதோ ஒன்று தன்னை ஆட்டுவிக்கிறது என்பதனை உணர்வான். இவ்வுலகுக்கு சிருஷ்டி கர்த்தா ஒருவர் வேண்டுவது அவசியமில்லை என்று குதர்க்கம் பேசுபவர்க்கும் கூட அவர் தம் ப்ரமையொழிய சந்தர்ப்பம் வாய்க்காமற் போகிறதில்லை. அவர்கள் தன்னையும் மீறி தம்மை ஆட்டுவிக்கும் ஒருவர் இருக்கிருரென்று அவசியம் உணரப்பெறுகின்றனர். தேசம், சமுகம் பொருளாதாரம் முதலிய பலவிதங்களிலும் மனிதன் சுதந்திரமாக வாழவும் ஆதிக்கம்பெறவும் உழைக்கிருன். சிறிது சிந்தித்துப் பார்ப்பானுனல் தான் ஒருவனுக்கல்ல பலருக்கு அடிமைப்பட்டு வாழ்கின்ருேம் என்பதையே உணர்வான். தன்னை அடக்கி ஆள்பவர்கள் பிறரல்ல; தன்னை விட்டுப் புறத்தே வசிப்பவரும் அல்ல; தன்னை விட்டகலாது தன்னிடமே குடிகொண்டு வாழும் இந்திரியங்களாகிற சேனுவீரர்களால் அல்லும் பகலும் இடைவிடாது வெருட்டப்பட்டு ஓடுகிருன். தனக்குத் தெரியாமலேயே எவ்வளவு தூரம் அவைகள் தன்மீது ஆதிக்கம் செலுத்தியிருக்கின்றன என்பதை உணரப்பெறுகிருன். இயற்கை

உணர்ச்சிகளாலும், ஆசைகளாலும் அலக்கழிக்கப்படாத மனிதர் உலகில் எவருளர். ஆனால், ஒரு சிலர் இருக்கலாம். அவர்களை ஏனைய மக்கள் தொகுதியினும் சிறிது உயர்ந்த வாழ்வுடையவர்களாகக் கருதலாம். அவர்கள் பொய், கொலை, களவு, கட்காமாதிகளிலிருந்தும் விடுபட்டிருக்கலாம். இவ்விதமாய தம் அருங்குணங் களைப்பற்றி உயர்வாகவும் பெருமையாகவும் புகழ்ந்து கொள்ளலாம் என்றாலும் சிற்சில நேரங்களில் கோபதாபங் களான கொடிய சத்துருக்கள் வசம் சிக்கும்போது அதனால் விளையும் பலன்கள் விவரிக்க முடியாத நிலைமையை உண்டு பண்ணி விடுகின்றன. இந்தக் கோபத்தாலாகிய நீங்காத் துன்பங்களின் விவரத்தை விசேஷமாகப் புராணங்களிற் காணலாம். கோபமே வாராத ஒருவருக்குக் கோபம் வந்தால் அது கடுங்கோபமாக அமைந்து விடுகின்றது. ஆக ஒவ்வொருவரும் தவிர்க்கமுடியாத இத்தகைய சந்தர்ப் பங்களில் சிக்குண்டு அச்சந்தர்ப்பங்களால் ஏற்படும் நிலை மைக்கு அடிமையாகி விடுகின்றார்கள். ஆயிரம் முறை இந்திரியங்களால் அழுத்தப்பட்ட பிறகுதான் ஆயிரத் தோராம் முறை வெற்றிக்கொடி நாட்ட முடிகின்றது. ஏனையோர் நம்மைப் பரிசுத்த வடிவரென்றும், ஜிதேந் திரியர் என்றும் புகழ்ந்து கூறலாம். ஆனால் அவர்கள் வார்த்தைகள் எவ்வளவு தூரம் உண்மையின் பால் எடுத் துக்கொள்ளக் கூடுமென்பது அவர்களுக்கென்ன தெரியும். நம் சிறுமை நமக்குத் தெரியாமற் போகாது. எனவே மனிதன் தன்னையும் மீறி ஏன் சிறுமை வாழ்வெய்துகிறான் என்றால்; உண்மையை உள்ளபடி கிரகித்துக்கொள்ள முடி யாததே காரணமாகும். இந்திரிய வயப்பட்டு வாழ்வதி னும் அடிமை வாழ்வு வேறில்லை என்று உணரப்பெறாத எவரும் தங்கள் தற்கால வாழ்க்கையில் மருள்கொண்

விடுகின்றனர். பொய்யை மெய்யோடு சமரசப்படுத்த முயல்கின்றனர்; ஆனால், அவைகளில் உள்ள உண்மைகளை எடுத்துக்கூறப்படுமானால், அதனை ஏற்றுக்கொள்ளுகிற தில்லை. அவைகள் இயற்கையாக, அமைந்துள்ள உலகின் இயல்பு என்று கூறி மழுப்பிவிடுகின்றனர். இஃது புண்ணைப் பொன்னிலையால் மூடுவது போலாகும்; அஃறியும் வருந்தி உழைக்காத கோழைகளது பேச்சேயாகும், ஆனால் கலங்கா நெஞ்சுடைய ஞானதீரர் சிலர் இவ்வித ஏசலான வாழ்க்கைக்கு உடன்படார். குற்றம் எங்கிருப்பினும் அதனைக்காண மறுக்கார் தம்மிடமிருந்தாலும் இல்லை என்று மறுக்காது அதனையுணர்ந்து அகற்ற முயல்வார். சாதிக்க முடியாதென்று தோன்றினும் அதனைச் சாதிக்க தீவிர முயற்சிசெய்வார். உலகத்தவரின் இன்ப வார்த்தைகள் அவர்களை ஏய்க்கமுடியா; கோப வார்த்தைகளைக் கண்டு அவர்கள் மனந்தளரார்; ஏனையோரது வாழ்க்கையினும் அவர்கள் வாழ்க்கை புறம்பானதாக அமைந்துவிடுகிறது. எந்த வீரன்தான் சத்துருக்களை போரில் வெட்டி வீழ்த்த முற்படாமலிருப்பான். ஆகவே, பொய்த் தன்மையான உலக வாழ்க்கை இறுதியில் தோல்வி அடைவதே இயல்பானாலும், உலகோர் தம் தம் இயற்கையால் வெற்றிபெறுவோம் என்ற திடநம்பிக்கை கொண்டு போராடுகின்றனர். இன்னதென்று விளக்கமுடியாத மறைபொருளாகத்தோன்றும் உலக இரகசியங்களாகிற கற்பாறையின் வழியாக ஊடுருவிப்போக முயல்கின்றனர். இத்தகைய மனிதர்களது கஷ்ட நஷ்டமும் துக்கமும் சொல்லுந்தரமன்று. இவ்வித துக்கானுபவகாலத்தில் இவர்களுக்கு அனுதாப வார்த்தைகள் கூறுவதற்கு எவருளர்; இன்னல்களையுணர்ந்து ஏற்ற உதவி செய்பவர்எங்குளர்; இவர்களுக்குக் கைகொடுத்து உதவும் மனிதரெங்கே ? ஒருவரும் இல்லாமையால் இவர்களைக்கண்டு உலகம் நகைக்கின்றது. உலக

மக்கள் இவர்களுக்கு விரோதமாக நிற்கின்றார்கள். ஆனால் இவர்களது வாழ்க்கை ஏனையோரது வாழ்க்கையினும் முரண்பட்டதாகின்றதல்லவா? அத்தருணத்தில் பயித்தியம் பிடித்துவிட்டதென்றே திருத்த முயல்கின்றார்கள். ஆக "உடையே உடுத்தாவூரில் கோவணங் கட்டினவன் பயித்தியக்காரனாவதுபோல" இவர்களது வாழ்க்கையும் அமைந்துவிடுகின்றது. இன்னிலைமையில் இரண்டுவித சத்துருக்களோடு போராட வேண்டியதாயிருக்கிறது. அத்தருணத்தில் உதவி சிறிதுமில்லாமல் ஓய்வு சிறிதுமில்லாமல் அல்லும் பகலும் அகத்தும் புறத்துமுள்ள இருவித சத்துருக்களோடு தனித்து கடும்போர் புரிவதாய் விடுகின்றது. கடவுளைச் சாட்சாத்காரம் செய்யவேண்டும் என்று விரும்பியுழைத்த பல்லோருடைய வாழ்க்கையும் இங்ஙனமே இருந்து வந்திருக்கின்றது. அப்படியானால் அவர்கள் கதி அதோ கதி தானா என்ற ஐயம் ஏற்படுகின்றது. அவர்களைக் கைதூக்குமவர்கள் எவர்களுமில்லையா? அவர்கள் தங்கள் முயற்சியின் அலுப்பால் உள்ளும் புறம்பும் ஓயாது போராடுவதால் மனமொழி மெய்கள் தளர்ச்சியுற்றுக் கீழே சாய்கின்றபோது ஊன்றுகோல்போன்று நின்று உதவக்கூடியவர் எவருமில்லையா? அப்போது தான் இவர்களது உதவிக்குச் சாஸ்திரங்கள் வருகின்றன; ஆனால், சாஸ்திரங்களும் ஆரம்பத்தில் நிலைகலங்கச் செய்துவிடுகின்றன. உலகில் எத்தனையோ சாஸ்திரங்கள் இருக்கின்றன. அவைகள் கூறும் முடிவுப்பொருளைப் பற்றிக் குறையொன்றுமில்லை; பெயரும் பாஷையும் மாறுபட்டபோதிலும் சகல சாஸ்திரங்களும் ஒன்றான பரம்பொருளையே இறுதிப்பொருளெனக் கூறுகின்றனவென்றாலும், அவ்வொன்றான உறுதிப்பொருளை எய்துவதற்கான வழிகளைப் பற்றி ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாகக் கூறுகின்றது. சிற்சில சாஸ்

திரங்களில் ஒன்று கூறும் மார்க்கம் மைற்றயதினும் முரண் பட்டதாகத் தோன்றுகிறது. எந்த குறிப்பிட்ட மார்க்கத் தைப் பின்பற்றுவது; எந்த மார்க்கம் ஏனைய எல்லா மார்க் கங்களினும் எளிதானது. எந்த சாஸ்திரத்தின்படி நடந் தால் தமக்குண்டாகும் எல்லா இடையூறுகளும் சஞ்சலங் களும் இல்லாமற்போகும்; எது தனக்கேற்றதும். முறை மையானதும், நிலைபெற்றதும் ஆகுமென்று பல சந்தே கங்கள் எழுகின்றன. சாஸ்திரங்களில் கூறப்படும் சில யோசனைகள் வெறுங் கொள்கைகளோடு அமைந்துள்ளன வாகத் தோன்றுகின்றன. மற்றும் பிற வாழ்க்கையில் அனுசரித்துக் காட்டினாலல்லாது நம்பத்தகுந்தனவாக இல்லை. இவ்வித நிலைமையில் தங்களது அல்லல்கள் அக லாது மேலும் மேலும் வளர்ந்துகொண்டே செல்லக்காண் கின்றனர். சாஸ்திரங்களில் சிற்சில விடங்களில் மாத்திரம் சில உற்சாக வார்த்தைகளும் ஆறுதலான மொழிகளும் காணப்படுவதல்லாது வேறு அதிகம் புலனாவதில்லை; அவ் வுற்சாக வார்த்தைகளும் நிலைத்த பலனைத்தருவதில்லை; சாஸ்திர வாசிப்பால் மட்டும் ஏற்படும் அனுபவம் உலக வாழ்க்கையின் பேரவாவால் ஒளி மழுங்கி விடுகின்றது. ஆக அவ்வனுபவமும் "ஆற்றிற் கரைத்த புளிபோல்" பிர யோஜனமற்றதாகத் தோன்றிவிடுகின்றது. பொதுப்பட சாஸ்திரங்களிடத்து நமக்குண்டாகும் நம்பிக்கை அவை களின் கர்த்தாக்களின் மேல் நமக்கிருக்கும் நம்பிக்கை யைப்பொருத்துள்ளது. அவை எவர் கண்டு பிடித்த உண்மைகள்; அந்த மகான் யாவர்? எந்த தீர்க்கதரிசி எந்த அவதார புருஷரால் கண்டு பிடிக்கப்பட்டனவென்று ஆராய்ந்து பார்க்கத் தலைப்படுகின்றோம். பொதுப்பட சாஸ்திரங்களின் ஆசிரியர்கள் பண்டைக்காலத்து மகா புண்ணிய புருஷர்களாக விளங்குகின்றனர். அவர்கள் பெரும்பாலோரது வாழ்க்கைச் சரிதங்கள் இக்காலத்தில்

எளிதில் நம்புதற்கிடமில்லாதபடி அமைந்திருப்பதாகத் தோன்றிவிடுகின்றன. அவர்களது வாழ்க்கைச் சரித்திரத்தில் கற்பனைகளும், கட்டுக் கதைகளும், விசித்திரங்களும், இரகசியங்களும் நிறைந்திருப்பதாகக் காண்கின்றோம். உண்மையாக அத்தகைய மஹாபுருஷர் ஒருவர் இருந்திருப்பாரா? அன்றி வெறும் கற்பனை புருஷர் தானா என்ற சந்தேகம் எழுகின்றது பல சமயங்களில். பழமை பழமையென்று போற்றுவதனாலேயும் பரம்பரையென்று சொல்லிக்கொள்ளுவதனாலேயும், அஃதாவது ஐதீகமென்று விள்ளுவதாலேயே முன்னேற்றத்துக்கு வர ஏற்படும் சிக்கல்கள் அகன்றுவிட மாட்டாதென்று கொள்வதால் சாஸ்திர கர்த்தாக்களின் மேல் உண்டாகும் ஐயத்தால் சாஸ்திரங்களும் பிரயோஜனம் அற்றவைபோல் தோன்றி விடுகின்றன. பரமாத்மாவினும் பிரிவற்றிருக்கும் தானன்றி வேறொன்றுமில்லாத பூரண சச்சிதானந்த வடிவாம்.

அன்பே உருவாய தனது நிஜவடிவத்தை அறிந்தவர்களுக்கு சாஸ்திரங்கள் குன்றாத நிறை பொருள் உடையனவாகத் தோன்றும். ஆனால் இன்ப வாழ்க்கை பெறவேண்டுமென்று கருதும் ஆரம்பிகளுக்கு அஃதாவது (முதற்படியிலுள்ளவர்களுக்கு) எவ்வளவு தூரம் அவைகளால் உதவி செய்ய முடியும். அவர்களுக்கு சாஸ்திரங்கள் இருந்தும் சஞ்சலசாகரத்தில் அழுந்தி நிலைதடுமாறுகின்றனர். ஆனால், ஆசாரியருடைய வாக்கியப்படி முன்னம் மகா புருஷர்களின் சத்சங்கம் மிகவும் அவசியமானதென்று கூறியுள்ளோம். என்றாலும் சிற்சில காலங்களில் நமது அறியாமை காரணத்தால் அவர்களது குணங்களை விட்டு குறைகளையே பெரிதும் காண்கின்றனம். நமது நம்பிக்கைக்கும், பூஷணைக்கும் காரணமாயிருந்த அவர்களை நாளடைவில் சத்தற்ற சக்கையைப்போல் காண்கின்றனம். அஃதாவது

ஆரம்ப மோகம் சென்றதினுலோ, அதிகம் பழகுவதினுலோ அவர்களது வாழ்க்கையிலும் வார்த்தைகளிலும் மனஊக்கம் குறைந்து நம்பிக்கையிழந்துவிடுகிருேம். ஆனுல் ஞானிகளின் மகிமையை மற்ருெரு ஞானியே உணரமுடியும்; ஏனையோரால் எங்ஙனம் அறிந்துகொள்ள சாத்யமாகும். இங்குதான் நம்பிக்கைக்கும் விசாரணைக்கும் முரண்பாடுண்டாகின்றது. எதனையும் விசாரணை செய்து வாழ்க்கை நடத்தவேண்டும் என்பதை எவரும் ஒப்புக்கொள்ளாமலிருக்கமுடியாது. எனவே பரமாத்மாவினும் தன்து எதார்த்த வடிவம் பின்னமற்றதென்ற உண்மையை ஒருவன் அறிந்து கொள்வானுனல், அதற்குப் பிறகு விசாரணைக்கு (காரண காரியங்களுக்கு) அவசியமில்லை. அதுவே சத்தியக்ஞானனந்த வாழ்க்கையாக அமைந்து விடுகின்றது. அதற்கு முன் ஒவ்வொருவரும், விசாரித்து வாழ்க்கை நடத்தவேண்டும் என்பது நியாயந்தான். என்ருலும், சிற்சில நேரங்களில் இந்த விசாரணை புத்தியும் நம்மை ஏமாற்றி விடுகின்றது. அஃது இடைவிடா சாதுசங்கமின்மையான நம்பலவீனத்தாலேயே பாதிக்கப்பட்டு விடுகின்றது. ஒருவனுக்கு எதனிடம் விருப்ப மிருக்கின்றதோ அதனையே புத்தியும் ஸ்த்திரம் செய்து விடுகின்றது. அதனை ஸ்தாபிப்பதற்கான நியாயங்களையே புத்தி எடுத்தோத முயல்கின்றது. ஆக, தன்சொந்த அபிப்பிராயத்தையே புத்தி நிலைநாட்டும். மனிதன் கண் திறந்து உள்ளதை உள்ளபடி காண்பது வெகு அருமையிலும் அருமை. பிறவிக் குணத்தாலும் பழக்க வழக்கத்தாலும் ஏற்படும் மனப்போக்கு எளிதில் மனிதனை விட்டு அகலுவதில்லை. இவ்வித குறைபாடான கண் கொண்டு பார்ப்பதால் தமக்கு ஒவ்வாத சகலமும் குறைவுடையனவாகவே தோன்றுகின்றன. வெறும் நம்பிக்கையும் அவ்விதக் குறைபாடுடையதாகவே இருக்கின்றன. விசாரணையில்லாமல் நம்பி மோசம்போவா

ரெத்தனைபேர் உண்மையை உணரும் வரையில் திட நம்பிக்கை ஏற்படுவது வெகு துர்லபம். அதுவரையும் விசாரணை நம்பிக்கை இவைகளிரண்டிலும் அகப்பட்டு ஊச லாடுவான். அதுகாலை நம்பிக்கையையாவது அகற்றிவிட வேண்டும். நியாயமாகத் தோன்றும் விசாரணையையாவது நீக்கிவிடவேண்டுமென்று அவனது மனது சஞ்சலமடை யும் எனவே நம்பிக்கை, விசாரணை இவைகளிருந்தும் சாதக னுடைய கஷ்டங்கள் அகன்றபாடில்லை.

இத்தகைய சிக்கல்களால் வழிகாண மாட்டாத சாத கன் சகல கஷ்டங்களையும் அகற்றக் கூடியது பிரார்த் தனையேயென்று கருதி, நேரே பரமாத்மாவை இறைஞ்சு கின்றான். உண்மையாகவும், திடநம்பிக்கையுடனும் தாம் வேண்டி அழைத்தால் தனது வேண்டுகோளை பூர்த்தி செய்ய பரமாத்மா வருவானென்றும் நினைக்கிறான். தன் னுடைய தாகந்தணித்து மனுஷத்தன்மைக்கு அதிக மான நிலைமைக்கு தான் உயர்த்தப்படுவானென்று உன்னு கிறான். ஹிருதய பூர்வமாகச் செய்யப்படும் பிரார்த்தனை எட்ட இருப்பதாகத் தென்படும். ஆனல். இறைவனுக்கு எட்டுகின்றதென உலகிலுள்ள எல்லா மகான்களும் எடுத் துக் கூறியிருக்கின்றனர். ஆயினும், சத்தியமான கடவுள் விஷயத்தில் உண்மையாகத் திரிகரணமும் ஒத்து ஈடுபடுவது தான் கிடையாது. ஒரு சில நேரங்களில் கடவுளின்றிக் கணநேரமும் இருக்கமுடியாது என்பதாக உணர்கின்றான். மற்றும் சில நேரங்களில் உலகமும் உலகப் பொருள்களும் அவனது மனத்தை இழுக்கின்றன. பிரார்த்தனைக்கு அம ரும்போது மனது கடவுளைத் தவிர்த்து சகல விதமான எண்ணங்களாலும் பாதிக்கப்படுவதைக் காண்கின்றான். கண் காதுகள் அடைபட்டிருந்தாலும் எண்ணங்கள் எப்படி யோ உள் நுழைந்து உபத்திரவப் படுத்துகின்றன. மனத்

தின் அடிப்பாகத்திலிருந்து திடுக்கிடக் கூடிய ஆபாச எண்ணங்கள் எழுவதை உணர்கின்ருன். இன்னதென்று அவனுக்கு விளங்காது திகைக்கின்ருன். தன் பிரார்த்தனை உண்மையானது தானு என்ற சந்தேகம் ஏற்பட்டு விடுகின்றது. உண்மையாக உள்ளன்பிலாத காரணமா என்று சஞ்சலப்படுகிருன். ஹிருதயம் சூன்யமாகத் தோன்றப் படுகிறது. தான்வேண்டுவதின் தன்மை இன்னவாருனது என்று பூரணமாகத் தெரிந்துகொள்ளாததனுல் தான் இக்கஷ்டங்கள் எல்லாம் வருகின்றன என்று உணர்கின்ருன். தனக்கு வேண்டாதது இன்னது என்பதனை நன்கு தெரிந்துகொண்டவன் உலகமும் உலகப் பொருள்களும்நிலையில்லாத் தன்மையன என்பதைப் பூரணமாக உணர்ந்து அவற்றை உதறித் தள்ளுகிருன். கடவுள் தனக்குக் கிட்டாத காரணத்தாலேயே தனது சாதாரண வாழ்க்கையும் கடவுள் வாழ்க்கையும் ஒன்று என்று சமரசப்படுத்தி மழுப்பி விடுகின்றதில்லை. கடவுள் காட்சி கிடைக்காமற் போனுலும் உலகம் என்னவென்பது அவனுக்கு நன்கு புலனுகின்றது. பகவானும், உலகமும், உண்மையும், மாயையும், எப்போதும் ஒன்ருகி விடமாட்டா. கோழைகளே இரண்டும் ஒன்றெனும் மருள்கொண்ட மனத்தினராய் வாழ்கின்றனர். ஒன்றை வேண்டும்என்ருல் மற்றையது வேண்டாமென்பதாகிறது. உலகபோகத்தில் அமிழ்ந்திருப்பவனுக்குக் கடவுள் வேண்டாம். இறுதியில் துன்பத்தையே விளைவிக்கும் உலகப்பற்றை விடமுடியாதவர்கள் கடவுளை எப்போதும் கருதார். உலகைத் துறப்பது நன்மையோ தீமையோ அது பற்றி இங்கு கேள்வியில்லை. இது வெறும் தர்க்கத்தின் மூலமாகவும், புத்திசாமர்யத்தாலும் மாத்திரம் ஸ்தாபித்து விடமுடியாது. இருட்டும் வெளிச்சமும் ஒன்று சேர்ந்து செல்லாது என்பது எவரும் அறியக்

கூடிய உண்மை. உலகத்தைக் கடவுளின் தோற்றமாகக் காணவேண்டுமென்று பலர் கூறுகின்றனர். கடவுளைக் காண்பதற்கு முன்னால் கடவுளைப்பற்றிப் பூரணமாக உணர்ந்துகொள்வதற்கு முன்னால் உலகம் அவரது தோற்றம் என்று எப்படி நினைக்கமுடியும் என்று சாதகன் கருதுகின்றான்.

அவனையே (கடவுளையே) நேரே பார்க்கமுடியுமானால் வெறும் தோற்றத்தோடே ஏன் திருப்திக்கொள்ள வேண்டும் என்று நினைக்கின்றான். கடவுளைக்காண்பது தன்னால் முடியாததாயினும் காணவேண்டும் என்னும் முயற்சியை விடுக்க அவனால் முடிகிறதில்லை. பழய காலத்திலிருந்து இதுவரைக்கும் ஒவ்வொரு தேசத்திலும் கடவுளைக்கண்ட மஹான்கள் எத்தனையோ ஆயிரக்கணக்காக இருந்துவரவில்லையா? அதுபோல நாம் ஒருவன் ஏன் அவனைக் காணமுடியாது? அவர்கள் உயர்ந்தவர்கள், நாம் தாழ்ந்தவரா இருந்தால் என்ன? கடவுளின் கண்களுக்கு உயர்ந்தவர் எவர்? தாழ்ந்தவர் எவர்? அனைவரும் அவருக்குச் சமமல்லவோ. மனிதனது பலவீனத்தைப் பொருட்படுத்துகிற அவர் பாபியினுடைய பாபத்தை அகற்ற முடியாத அவர், கடவுளாகவிருக்க முடியுமா? உலகந்தான் ஒருவனது குற்றங்குறைகளையும், உயர்வுதாழ்வுகளையுங்கண்டு பேசுகின்றது. ஆனால், அனைவரும் கடவுள் கருணைக்குப் பாத்திரர்களல்லவா? உலகங்கூட தன் குற்றம் உணர்ந்த கொலையாளியினிடம் அனுதாபங்காட்டுகிறதென்றால் கருணையங்கடலான கடவுளைப்பற்றிக் கூறவேண்டுமா? அதனோடு வாழ்க்கை கட்டுண்டு கிடப்பதாகப் புலப்படுகிறது. கட்டுப்பட்ட மனிதத்தன்மையிலிருந்து விடுபடவிரும்புகின்றான். கடவுளைக்காணத்தடுக்கும் எதிரிகளிடமிருந்து சுதந்தரம் வேண்டி பகவானைப் பிரார்த்திக்கின்றான். கடவுள் இத்தகைய சிக்கல்களிலிருந்து சாதக

னைக் காப்பாற்றாமல் விடுவாரா? காப்பாற்றியே தீருவார் என்பதைத் திடமாய் நம்புகின்றான். கடவுளின் புத்திரரான அவதார புருஷர்களெல்லாம் உலகமக்கள் ஒவ்வொருவரிடமும் எல்லையற்ற அன்பும், அனுதாபமும் காட்டினது சரிதமல்லவா? ஸ்பரிஸமாத்திரத்தாலும், கடைக்கண் பார்வையினாலேயும் எத்தனையோ பாபிகள் புனிதமாக்கப் பட்டிருக்கின்றார்களே. அப்படியானால், அவர்கள், அனைவரினும் பார்க்கக் கடவுள் அபார சக்திவாய்ந்தவரல்லவா? அவர் அவர்களினும் அளவுகடந்த கருணையும் அனுதாபமும் உடையவரல்லவா? தன்னை மற்றவர்களோடு ஒப்பிட்டுத் தாழ்ந்தவன், கீழானநிலையிலிருப்பவன் என்று உலகங்கூறுவதானாலும் கடவுளன்புக்கு எவ்விதத்திலும் தான் தாழ்ந்தவனென்று கருதுகிறதில்லை. தன்னுடைய இருதயக்குகையில் கடவுள் மறைந்து கவனித்துக்கொண்டிருப்பதை உணர்கின்றான். ஆனால், கடவுளுக்கும் தனக்கும் உள்ள தூரத்தை அவனால் அகற்றமுடியாது தவிக்கின்றான். எப்போது தன்னிடம் வந்து சேருவாரென்று ஏங்கியழுகின்றான். அதுவே உலக சரித்திரத்திலுள்ள சகல மகான்களும் அகமமதையற்று என்பெலாம் நெக்கு நெக்குருக, ரோமம் சிலிர்ப்ப, உடல் குழைய மனமிளக அனலின் மெழுகாயிடையறாதுருக, வரும் மழைபோலிறங்கி இருவிழிகள் நீரிரைத்து அன்பினால் மூர்ச்சித்து சாதனத்தைப்பெற்ற பின்னரே சாத்தியப்பட்ட முத்திப்பேற்றை அடையப்பெற்றார்கள். இம்முறையே சாதகனுக்கு ஆறுதலையும், ஊக்கத்தையும் அளிக்கின்றது. உலகவாழ்க்கையில் நாம் வேண்டுவதை சாமர்த்தியத்தாலும், சுலபமானமார்க்கத்தாலும் மனிதன் அடைந்துவிடலாம். ஆனால், கடவுள் சம்மந்தப்பட்டவரையில் குறுக்குவழியே கிடையாது. கடவுளைப் பெறவேண்டுமானால் அவனுக்குச் செலுத்தவேண்டியவை அனைத்தும் அரைக்காசுங் குறைவில்லாமல் செலுத்தினால்

தான் பரமாத்மா கிட்டுவார். நாளைத் தருவோமென்ற கெடு அவரிடம் செல்லாது. பண்டைக்காலத்து பக்தர்கள் கடவுள் சாட்சாத்காரத்தின் பொருட்டு எய்திய கஷ்டங்கள் உலகம் அறிந்தவைகளே, அதன் பிறகே முக்திப்பேற்றையடையப்பெற்றார்கள். அகந்தையை வைத்துக்கொண்டு என்ன பக்தி பண்ணினாலும் இறைவன் கிட்டுகிறதில்லை.

அகங்காரக்கிரந்தி கேடுறும்வரையில் சாதகன் போராடியே தீரவேண்டும். இறைவன் எங்கேயும் தூரமாய் எட்டியிருக்கவில்லை. நம்மருகில் நம்மிடமே நம்மயமாகவேயிருக்கிறான்; ஆனால், அகந்தை அவனை கிட்டுவிக்கிறதில்லை, எட்டி இருக்கும்படி செய்கிறது. இடைவிடாத போராட்டத்தின் இறுதியில்தான், இந்த அகந்தை அகல்கின்றது. அப்பொழுதுதான் அன்புருவாம் இறைவனிலும் பிரிந்திருந்தவனுகத் தோன்றிய மோகத்தன்மை கெட்டுப் பின்னப்படாத சம்பூரண பக்தியின் சொரூப சாட்சாத்காரங்கிட்டுகிறது. அத்தருணமே தன்னகந்தை இறைவனது சங்கற்பத்தோடு ஒன்றிவிடுகின்றது. வெளிப்பார்வைக்குச் சாதாரண மனிதன்போல் தோன்றினாலும், வேறு எந்த ஆசையும் எந்த அபிமானமும் இல்லாது வாழ்கின்றான். தன்னிலே, தான் பிரீதிகொண்டு வாழ்கின்றான். அவனுக்கு வேண்டுவது வேண்டாதது ஒன்றுமில்லை. ஆனால் இன்னிலையை அடைவதற்கு முன் சஞ்சலம், சந்தேகம், சோர்வு, முதலிய கடக்கமுடியாத சகல தடைகளையும் தாண்டிச்செல்ல வேண்டியிருக்கிறது.

உணர்வுடையார்க்கு உலகமுந்தோன்றும்
உணர்வுடையார்க்கு உறுதுயரில்லை
உணர்வுடையார்கள் உணர்த்தவக்கால
உணர்வுடையார்கள் உணர்ந்துகண்டாரே.

(திருமந்திரம்.)

தன்னுளே திரைத்தெழுந் தரங்க வெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்திருந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளேயடங்குகின்ற நீர்மை நின்கணின்றதே"

(திருமழிசைப்பிரான்.)

"நெறிபட்ட சற்குரு நேர்வழிகாட்டிடில்
பிறிவற்றிருக்கும், சிவம்."

உடல்குழைய வென்பெலாம் நெக்குருக
விழிநீர்களூற்றென வெதும்பியூற்ற
வூசிகாந்தத்தினைக் கண்ட ணுகல்போலவே
யோருறவு முன்னியுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண்ணடுக்குறப்
பாடியாடிக் குதித்துப்
பனிமதிமுகத்திலே நிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த் தெழுந்து
மடலவிழுமலரனைய கைவிரித்துக்கூப்பி
வானேய வானிலின்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்தும்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்சனுக் கெளியையோ
கருதரிய சிற்சபையிலானந்தரித்தமிடு
கருணாகரக்கடவுளே.

(தாயுமானவர்.)

———

# பிரபஞ்சோற்பத்தியின் உண்மை.



எங்கும் நிறைந்து பரிபூரணமாயிருப்பவர் கடவுள் ஒருவரே என்பதை வேதாகம புராணங்களும், சகலமதச் சான்றோரும், ஏற்றுக்கொள்வதில் யாதோர் ஆக்ஷேபனையு மின்றேனும், அக்கடவுளுக்கு அன்னியமாய்ப் பிரபஞ்சத்தையும், இப்பிரபஞ்சத்திலுள்ள ஜீவர்களையும், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் முதலிய பஞ்ச கிருத்தியம் செய்யும் ஈஸ்வராதிகளும் அப் பரம்பொருளுக் கன்னியமாய் எவ்விதம் உண்டாகி ஒடுங்குகின்றார்கள் என்ற சங்கை மட்டிலும் சாமானியத்தில் எவரும் விளங்கிக்கொள்ள இயலாமல் இருக்கிறது. ஆனால், இதற்கு இப்பொழுது புதிதாய் ஒன்றும் தெரிவிப்பதற்கில்லை. இதைப் பற்றிப் பிரம்மசூத்திரம், உபநிடதம், பகவத்கீதை, முதலிய பிரபல சுருதிகளில் சிறந்த கருத்துக்கள் சொல்லப்பட்டிருக்கின்றது. அவைகள் சற்குருமுகமாய் நீண்டகாலம் இருந்து விசாரணை செய்பவர்களுக்கே நன்கு விளங்கும். அஃதன்றி சிந்தித்து அறிந்து கொள்வதற்கு ஏற்றவாறு அவைகளிலுள்ள தாத்பரியங்களை மட்டும் சுருக்கமாக இங்குவரையப்பட்டிருக்கின்றன. அஃதாவது தானன்றிவே றொன்றுமில்லாத பூரணச்சச்சிதானந்தவடிவாய்ப் "பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைந்திருக்கும்" பரமாத்மாவுக்கன்னியமாய் காலத்திரயத்திலும், தேகாதி நாமரூப பிரபஞ்சவஸ்துக்கள் உண்மையில் உண்டாகி ஒடுங்கவில்லையென்றும், ஆனால் ரச்சுசர்ப்பம்போல் பொய்யாக உண்டாகி ஒடுங்குகிறதென்றும், அதனையே திருஷ்டி சிருஷ்டி வாதமென்றும் அல்லது அஜாதவாத சித்தாந்த மென்றும்

உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஏனெனின் கடவுளின் எதார்த்த நிலையையே அறிவிப்பதில் கருத்தாக சாஸ்திரங்கள் பிரபஞ்ச உற்பத்தியைக் கற்பிதமாகக் கூறவந்ததன்றி, உற்பத்தியை எதார்த்தமாகக் கூறவரவில்லை என்பதே நாம் முக்கியமாய் அறியவேண்டியதாகும். (எங்ஙனமெனில்) அநுதினமும் சகலருக்கும் அநுபவமான நித்திரையின் உற்பத்தியையும், நாசத்தையும் சொல்லுவதற்கே கூடாமையாயிருக்க, பிரபஞ்சோற்பத்தியின் லயத்தை எவரால் எடுத்துரைக்கத்தகும். ஒருவராலும் ஆகாது. ஆயினும், சகல மதஸ்தரும் ஒப்புக்கொள்ளும்மாறு வேதாந்த சாஸ்திரத்திலுரைக்கும் பிரபஞ்சோற்பத்திலயத்தைச் சாஸ்திராநுசாரமாய்ப் பெரியோர்களால் கேட்கப்பெற்ற முறையையே இதில் விளக்க நேர்ந்தது. அகண்ட பரிபூரண சச்சிதானந்த நித்திய நிர்மல சொரூப சாக்ஷாத்கார சுயம்பிரகாசமாகிய ஒப்பற்ற பரப்பிரம்மவஸ்துவானது நாமரூப ரகிதமாயிருக்கிறபடியால், இப்படிப்பட்டதென்று யாவராலும் சொல்லக்கூடாததாயிருக்கின்றது. சொல்லப்புகின் பிரமைக்குள்ளாகுமாதலால், அத்வைதமாகிய நிற்குண வஸ்துவுக்கு பிரம்மமென்கிற நாமமுண்டாயிற்று, இப்படியே பலகாரணங்களாற் பல நாமங்களேற்பட்டது, நிராங்காரமாகிய பரப்பிரம்மம் நிலாத்திபம் போலவும், அலைகளில்லா ஆழி போலவும், ஓவியம் போலவும், காந்தமலை போலவும், சலனமற்றிருக்க அதன் சன்னிதானத்தில் காந்தக்கல் முன் இரும்பு ஊசிகளைப்போலவும், அக்கினியிற் சூடுபோலவும், விளக்கின்னிழலைப் போலவும், ரச்சுசர்ப்பம் போலவும், கானல் நீர் போலவும், சலனமே சுபாவமான மூலப்பிரகிருதியும் அவ்வியக்தமென்னும் பேருடைய ஓர் மாயாசக்தியும் உண்டாயிற்று. இதன் வடிவம் இருளேயாம். எங்ஙனமெனில், சந்திரசூரியர் உற்பத்தியாகாமுன் எங்கும் அந்தகாரமே நிறைந்திருந்தது, அவ்வந்தகாரமே

மாயையென்றுரைக்கத்தகும். அகண்டபேரொளியாயிருக்கின்ற பரப்பிரம்மம் ஓர் தீபமாம். அத்தீபத்தின் நிழலே மாயையாம். தனிப்பெருவெளியாய பிரம்மத்தினிடத்தில் "மலடி மகன்போல" அணுவுக்கணுவான, மாயையென்னும் இருள் எப்போது உண்டாயிற்றோ அப்போதே ஒன்றுண்டானால் அதில் அனேகமுண்டாமென்கிற சம்பவப் பிரமாணப்படி முழுதும் மித்தையான மாயையிற் பிரதிபலித்த பரப்பிரம்மத்திற்கு, ஆரோபமாய் ஈஸ்வரனென்கிற பொதுப்பெயருண்டாயிற்று. ஆனால் அநேக விசித்திர ரூபமானமாயாப்பிரதிபிம்பனான ஈஸ்வரனுக்கும் அநேக விசித்திரரூபமுள. எப்படியென்றால், சலன சுபாவமான மாயாந்தகாரத்தில் சப்த தன்மாத்திரையான அரூபஆகாயமும், அதிற் பிரதிபலித்த பிரம்மத்துக்குச் சதாசிவனென்றும், அரூபமான ஆகாயத்தில் சத்தத்துடன் பரிசதன் மாத்திரையான வாய்வும் அதில் பிரதிபலித்த பிரம்மத்திற்கு, மகேசுவரனென்றும், ரூபாரூபமான வாயுவில் சப்தஸ்பரிசத்துடன் ரூபதன் மாத்திரையான தேய்வும் அதிற் பிரதிபலித்த பிரம்மத்திற்கு உருத்திரனென்றும், ரூபமுள்ள தேயுவில் சப்தஸ்பரிசரூபத்துடன் ரஸ தன்மாத்திரையான அப்புவும் அதிற் பிரதிபலித்த பிரம்மத்திற்கு விஷ்ணுவென்றும், ரூபமுள்ள ஜலத்தில் சப்தஸ்பரிச ரூபரசத்துடன் கந்ததன் மாத்திரையான பிருதிவியும் அதிற் பிரதிபலித்த பிரம்மத்திற்கு பிர்மாவென்றுஞ் சொல்லப்படும், பஞ்ச பூதங்களும் மாயையின் அம்ஸமாம். பஞ்சகர்த்தாக்களும் பிரம்மாம்ஸமாம். பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமான மாயை, பிர்ம்மத்தில் ஓர் அணுவெனச் சொல்லப்படும்.

மாயையென்னுஞ் சாயையில் விசாலமான ஆகாயமும் ஆகாயத்தில் வாயுவும், வாயுவில் தேயுவும், தேயுவில் அப்புவும், அப்புவில் பிருதிவியும் அடக்கமாயிருக்கும். நிர்ச்சலன

மான ஆகாயத்தைப்போலவிருக்கும் பரப்பிரம்மத்தினிடத்தில் தனக்குத்தானே யுண்டாகிச் சுழலும் சுழல்காற்றுக்கிணையரன மாயையானது பஞ்சபூதங்களாயிருந்து ஒன்றுடனொன்றைச்சேர்க்கும். அம்மாயையே ஈஸ்வரப்பிரயோகத்தால் அநேக அண்டங்களாகியும், மயில் முட்டையைப் போல நானுவிசித்திர ரூபங்களால் விளக்கமுற்றும் இருப்பதோடல்லாமல், ஸ்படிகம்போல் நிஷ்களங்கமாய் சுத்த துல்லியமாயிருந்தும், பஞ்சவர்ணக் கோட்பாட்டால் பலவித வர்ணங்களாய் எப்படி தோற்றப்படுமோ, அப்படியே அரூபமுள்ள சதாசிவனுகவும், ரூபாரூபமுள்ள வாயுவிற் பிரதிபலித்த பரப்பிரம்மம் ரூபா ரூபமுள்ள மகேசனுகவும், ரூபமுள்ள தேயு அப்பு பிருதிவியிற் பிரதிபலித்த பரப்பிரம்மம் ரூபமுள்ள ருத்திர, விஷ்ணு பிரம்மாவாகவும் விளங்கின.

பிருதிவிசொரூபமான பிரம்மாவானவர் ஐந்து குணமுள்ள பிருதிவியால் அநேக அண்டபிண்டங்களைஉண்டாக்கினுர். விஷ்ணுவானவர் நான்கு குணமுள்ள அப்புவால் இரட்சிக்கத்தொடங்கினுர். ருத்திரன் மூன்று குணமுள்ள தேயுவால் சம்ஹாரஞ்செய்யத் தொடங்கினுர். மகேசுவரன் இரண்டு குணமுள்ள வாயுவால் மாயாம்ஸமான ஜீவர்களுக்கு மயக்கமுண்டாக்குவார். சதாசிவன் ஏக குணமுள்ள ஆகாயத்தால் ஜீவர்களுக்குத் தெளிவையுண்டாக்குவார். மாயை, பஞ்சபூதாம்சமான தேகேந்திரியாதிகளே நான் நானென்னும் அகங்காரக்கிரந்தியை விளைவிக்கும். பிரம்மம், தேகாதிகளுக்கும், நான் என்றிருக்கும் சிதாபாஸனுக்கும் விலக்ஷணமாய், எல்லா வற்றிற்கும் சாக்ஷியாய் இருந்து அறிந்துகொண்டு, சுலக்ஷணமாகி, திருக்குவாகிய ஆத்மாமாத்திரமாயிருக்கும். பிரம்மாவானவர் சாக்கிராவஸ்தையாய், ஜீவனை நானுவித போகபோக்யங்களிலலையச் செய்வார்.

விஷ்ணு சுவப்பனுவஸ்தையா ஜீவனுக்குப் பலவித லீலையைக்காட்டுவார். உருத்திரன் சுழுப்தியவஸ்தையால் எல்லாவற்றையுஞ் சூனியமாக்கிச் சீவனைத் தனியாக்குவார். மஹேசுவரன் ஜீவனுக்குத்துரியாவஸ்தைக்கிணையான ஓர் மயக்கமுண்டாக்குவார். சதாசிவன் ஜீவனுக்குத்துரியாதீத அவஸ்தைக்கிணையான ஓரானந்தமுண்டாக்குவார். மாயை, சுகத்தை மறைத்து, சுத்த சூன்யமாய்ப்பிரமிக்கச்செய்யும். பிரம்மம், சுயம்புவாய் அறிவானந்தமாயிருக்கும். பரப்பிரம்மமான இந்த ஆத்மானந்தத்தை மாயாவிசேஷத்தாலறியாச் சீவன், துக்கத்தையே சுகமாக நினைத்து, அளவற்ற ஆசைக்குள்ளாகி இச்சா சொரூபமான பல தேகங்களெடுத்து, ஜெனன மரணமென்னும் வாரிதியில் அமிழ்ந்திகரைபேறுதற்கோர் துறைகாணமல், துக்கத்தையே அனுபவித்துக்கொண்டிருக்கும். பஞ்சதன் மாத்திரைகள், பஞ்சபூதங்கள் இவைகளாலுண்டான அண்டபிண்ட பிர்மாண்டங்களும், மாயையினுடைய லீலையன்றிவேறில்லை. விவேகத்தாலறிவுன்றி விசாரிக்கில் ஜீவசப்தமேஇல்லை. எங்ஙனமெனின், தேகாதிகளைப் பஞ்சபூதாம்ஸமென்று நியதிசெய்து பார்க்கையில் நானென்னும் ஜீவசப்தம் சூன்யமாகும். தேகாதியை நானென்று அகங்கரித்திருக்கும் பிரமையே ஜீவனன்றிவேறில்லை. சாட்சியாகியஆத்மாவே பிர்ம்மமாகும். இந்த கூடஸ்த பிரம்மமே, சுயம்பிரகாசமாய் ஜாக்கிரசுவப்பன சுழுப்தியிலுள்ள விஷயபோகங்களையும், நானுபேத விசித்திரங்களையும் சூன்யத்தையும், ஜீவனுக்குள்ள மயக்கத்தெளிவையும், விலக்ஷணமாயிருந்து அறிந்துக்கொண்டு அவைகள் நானுபேதப்பட்டாலும் தான் அபேதமாய் அவைகள் அசத்தானுலும், தான் அழியாச் சத்தாய், அவைகள் அஞ்ஞானமயமானுலும் தான் ஞானமயமாய், அவைகள் துக்கமயமானுலும் தான் ஆனந்தமயமாய் நிர்மலமாய், நிர்விகாரமாய், நிருபமாய், ஏகப்பிரகாசமாய்,

அருட் பெருவெளியாய், அகண்டபரிபூரணமாய் விளங்கி யிருக்கும். மாயையோ, ஓர்காலத்தில் விசித்திரரூபங்களாய் அநிர்தசடதுக்கமயமாயிருக்கும். இந்த மாயையை நாடி ஞேர்க்கு விசித்திரமான சித்திகள் சித்தித்தாலும் நானென் பதற்ற பிரம்மக்ஞான மில்லாமையால், அகங்காரம் விருத்தி யடைந்து, முடிவில் துக்கமே பலிதமாகும், பிரமத்தை நாடி ஞேர்க்குச் சித்திகள் பல பலிதமாவதோடு அகண்டானந் தமுமுண்டாகி, இறுதியில் கைவல்யம் கிடைக்கும், பிரம் மாம்ஸமான பஞ்சகர்த்தாக்களில் யாரைப்பரதெய்வமென நம்பித்தியான தோத்திரங்கள் செய்தாலும் அந்த பரப்பிரம் மத்தையே தியானதோத்திரஞ் செய்ததாகும். அதனாலே யே பலர் எந்த தேவதையை இஷ்ட தெய்வமெனத் தொழு தார்களோ அந்த தேவதையையே தேகவியோகபரியந்தம் நம்பி அத்தேவதையின் அருளாலேயே மோட்சமடைந்தார் கள். ரூபமுள்ள தேவதைகளைத்தள்ளி ரூபமில்லாத பரப் பிரம்மத்தை தியானித்தல் வெகுதுர்லபமாயிருக்கும். ஏனெ னில் ரூபத்திலேயே நிலைபெற்றிராத மனம் அரூபத்தில் நிலை பெற்று நிற்பது அருமையாதலால் சுலபமாய் முத்தியை நாடும் வழி சகுணமே எனச்சான்ருேரனைவரும் அங்கீ கரித்துள்ளனர்.

இதிலிருந்து தேர்ந்து அரூபமான பரப்பிரம்மத்தை நாடி ஞேர்களைப்போல எல்லோரும் ரூபத்தைவிட்டு அரூபத்தை தியானஞ்செய்வதால் நிஷ்பிரயோசனமே பலிதமாகும். ஆனுல் உறுதியான மனதால் தியானிப்பதற்கு ஓர் தடையு மில்லை தடைசொல்வாருமில்லை. பரப்பிரம்மமே சிருஷ்டி யாதி கிருத்தியங்களியற்றுகின்றதென்ருல் அதனை நிர்ச் சலனவஸ்து வென்று உரைத்தல் கூடாது. (நினைத்த மாத் திரத்தில் சகலமுமுண்டாயிற்றென்ருல்) நினைப்பிருந்தால் மறப்புமிருக்கும். இவ்விரண்டுமிருந்தால் விகாரமுமிருக்கும்,

ரூபமுமிருக்கும். விகாரமும் ரூபமுமில்லாப் பரம்பொரு ளுக்கு நினைப்புண்டென்பதே எல்லாச் சங்கைகளுக்குமிடமா யிருக்கின்றது. ஆதலால் திரிமூர்த்திகளாலேயே சிருஷ்டி திதிலயங்கள் நடக்கின்றது. ஆனதால் அவர்களையும் முக் கியமாய் வணங்குதல் வேண்டும். திரிகரணமுமொத்துப் பரமப்ரேமையுடன் அந்தரங்க சுத்தியாய் திரிமூர்த்திகளை யாவது, பரப்பிரம்மத்தையாவது பஜிப்பவனே பரமபக்த னென்று உரைக்கத்தகும். பரம்பரையாகவும் அதாவது சோபானமாயுமுள்ள இம்முறையையே அனுஷ்டிப்பவர் களுக்கு ஈஸ்வரகிருபையும், வேதகிருபையும், அந்தக்கரண கிருபையும், சற்குருகிருபையும் அடைபப்பட்டு இறுதியில் சித்திப்பது ஜீவன் முத்தித்தன்மையாம். ஜீவன் முத்தி யென்பது தேகாதிகளை நியதிசெய்து, தன்னையறிந்து. தானே பிரம்மமென்றுணர்ந்து, பிரம்ம நிஷ்டாசாதனத் தால் விஸ்ராந்தியடைந்து, தன்னை மறந்து பரப்பிரம்மத் துக்குள் ஐக்யமாய் ஆனந்தவாரிதியில்மூழ்கி தான் இன்னு னென்று உணராமல் ஆரூடஞானியாதலேயாம். கேவலம் மௌடீகனுயிருப்பதினும், மூர்த்தித்தியானம் செய்பவனதி கம். அவனிலும், பரப்பிரம்மத்தைத் தனக்குள்ளறிபவன திகம். அவனிலும் அப்பரம்பொருளாயிருப்பவனதிகம். அவனிலும் அகண்டானந்தத்தாற்றன்னையின்னுனென்றறி யாமல் சாட்சாத்காரத்தை அடைந்திருப்பவனதிகம். அவ னிலும் திக்குத்தேசாதிகளிறந்து உன்மத்த பாலபைசாசம் போலவிருக்கும் சகச ஞானிகளைத் தேடிக்கண்டுபிடித்து அன்னபானுதிகளூட்டிக் குற்றேவல் செய்பவனதிகமாவா னென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. ஆனால் மத பேதகர்க்குச் சதுர்வேதமும் சங்கையேயாகும். சம்மத முள்ளசாதுக்களுக்கு ஓர் மொழியேபோதும். எழுவகைத் தோற்றங்களான சராசரங்கள் எத்தனையுகமிருந்தாலும் ஓர் காலத்தில் பூமியிலடங்கிப்போகும். பூமியோ சூரியஉஷ்ணத்

தால் சூன்னமாகிப் பிரசண்டவாயுவினல் தூளாகி வருண பகவானல் ஜலமயமாய்ப் போகும். ஜலமோ, அக்கினியால் வற்றிப்போகும். அக்கினியோ வாயுவால் இல்லாமற்போகும். வாயுவோ ஆகாயத்திலடங்கிப்போகும். ஆகாயமோ, இருள்மயமான மாயையிலடங்கிப்போகும். மாயையோ தன் சாமார்த்தியங்கெட்டுச் சூரியனைக்கண்ட பனியைப் போலவும், அக்கினியில் விழுந்த சருகைபோலவும், சுத்த சூன்யமாய்ப் பிரம்மத்தில் இல்லாமற்போகுமானல், இந்த உடலைத்தானென்றும், உலகத்தை மெய்யென்றும் மதித்து அகந்தையடைந்திருக்கக் கூடுமா? மாயை இவ்விதமா யொடுங்கியும், பரப்பிரம்மம் ஆதிமத்யாந்தாகிதமாய், நாம ரூபவிகாரமில்லாததாய், அகண்டானந்தமாய், நித்தசுத்த புத்த முத்தமாய், நிஷ்கள புஷ்கள நிராமயமாய், நிர்ச்சேத நிர்பேத நிராவரணமாய், என்று முள்ளபடியேயிருக்கும். ஆதலால் தனக்குள் இப்போது பந்தலட்சணத்தோடு இருக்கும் பரமாத்மாவை சற்குருவாலறிந்து கூடஸ்தபிரம்மம் சஜாதிகவிஜாதிகஸ்வகதபேதரகிதமென்றும், அகண்டபரி பூரணஸ்வரூபியென்றும், சத்யக்ஞானனந்தவஸ்து வென்றும், தேவரும் மூவரும் யாவரும் போற்றும் ஆதிதெய்வ மென்றும், முத்தரும், பத்தரும், சித்தரும் வணங்கும் பரம் பொருளென்றும், சித்தவிலாச சின்மய சுயம்பிரகாச தேஜோமயமென்றும், விளங்கிக்கொண்டிருக்கும். இதை யடைந்தவர்களுக்கே ஜெனன மரண துக்கமென்னும்பரை யொழிந்துபேதரகிதமாயிருக்குமென்றும், சகல பாபகர்மங்கள் விமோசனமாகுமென்றும், நரகவேதனை இல்லையென்றும் மோட்சானந்தம் கிடைக்குமென்றுஞ் சொல்லப்படும். இதிற் சந்தேகமே இல்லை.

கடத்தை மண்ணென வுடைந்தபோதோ இந்தக்கருமச்
சடத்தைப் பொய்யென விறந்தபோதோ சொலத்தருமம்
விடத்தை நல்லமிர்தாவுண்டு பொற்பதுவெளிக்கே
நடத்தைக்காட்டி யெவ்வுயிரையு நடப்பிக்குநலத்தோய்

(தாயுமானவர்.)

# சகுண நிர்க்குணத்தியானத்தின் உண்மை.

---

வேதவேதாந்தங்களில் கர்மம், பக்தி, ஞானமென, காண்டத்திரயங்கள் சொல்லப்படடிருப்பதில் எவெரெவர் எதையெதை அனுஷ்டிக்கவேண்டுமென்பதை விசாரிக்க வேண்டியது அத்யாவசியம். அதாவது பகவத்தியானம் மேன்மையானதா? பிரம்மக்ஞானம் மேன்மையானதா? என்பதே இவ்விசாரத்துக்கு முக்கியமாகும். ஆனல் இதைக் குறித்து நாம் எந்தமுடிவும் கூறிவிடமுடியாது. ஏனெனில் சகலருக்கும் பொதுவான வேதாகம புராணங்களில் கர்ம, பக்தி ஞானமென்னும் மூன்றையும் அவரவர்கள் பக்குவத்திற்கேற்றபடி உரைக்கின்றதன்றி வேறன்று. அதெப்படியெனின் தேகமே தானென்றிருப்பவர்கள், கர்மக்கிரியைகள் செய்யவேண்டுமென்றும், ஜீவனே தானென்றிருப்பவர்கள் பக்திமார்க்கத்தைக் கைக்கொள்ளவேண்டுமென்றும், ஆத்மாவேதானென்றிருப்பவன் பரமாத்மாவில் அயிக்கியப்பட்டுத் தேகஸ்மரணை விட்டு மௌனசமாதியையடைந்து நான் நீயென்னுந்துவிதபாவனையைக் கடந்து துரியதிருஷ்டியை மேவியிருக்கவேண்டும் என்றும், சாஸ்திரங்கள் கூறுகின்றன. உன்மனியவஸ்த்தையடைந்த பிர்மக்ஞானத்தினும், நிர்க்குணத்தியானத்தினும் நிரூபமாயிருக்கும் பரப்பிர்மமாகிய கடவுளைப் பூசித்து ஐந்தாம்பதவியாகிய கைவல்யத்தையேயாஜித்து ஜீவன் முக்தர்களாயிருந்து இறுதியில் விதேககைவல்யத்தையடைவார்கள். சிலருக்கு ஞானமே சுலபமாயிருக்கும்; சிலருக்குபக்தியேசுலபமாயிருக்கும்; ஆனல், பிர்மக்ஞானம் அனந்தஞ்சென்மங்களில் பரமப்பிரேமையோடு பகவானைப் பூசித்தவர்களுக்கே கிடைக்கும்,

ஆனந்தமாத்திரமாயிருக்கும் மௌன நிஷ்டையிலிருப்பது எளிதல்ல; திரிவிதவுலகத்து அரிதொருஞானியென்று சாஸ்திரங்களில் முறையிடுகின்றது. கர்ம, பக்தி, ஞானமென்னும் மூன்றும் பிஞ்சு-காய்-கனியைப்போன்றதேயாம்; ஜென்மாந்தரங்களில் சத்கருமங்களினால் பகவானைச் சந்தோஷப்படுத்தி பக்தியினால் அவரது அருட்பிரசாதம் பெற்று அவ்வருள் விலாசத்தால் அதிசூக்ஷுமமாயிருக்கும் பகவானை அந்தரங்கத்தில ஞானக்கண்ணாலறிந்து, சகல சந்தேகங்களையுங்களைந்து, நிர்குணத்தியானபரனாகி ஆனந்த சாகரத்திலமிழ்ந்து, சத்யக்ஞானானந்தமயமாய்த் தழைந்து தன்னைமறந்து, திக்குத்திசாதிகளிறந்து, ஆரூடக்ஞானியாகவேண்டும். அப்படிக்கின்றி வாசாக்ஞானத்தால் அகம்பிர்மமென்கிற உண்மையை உணர்ந்துவிட்டதாக நினைத்து தேகாதிகளில் வாஞ்சைவைத்து முன்னணியாயுள்ள கர்ம பக்தியுமில்லாமல் இறுதியாயுள்ளதும், மேன்மையானதுமாயபிர்மானந்த லாபமுமில்லாமல் பிரஷ்டர்களாய் அனந்த ஜென்மங்களெடுத்து உழலும் அக்ஞானிகளுக்குக் கடவுளருட்பிரகாசம் பிரமகற்பங்களிலும் கிடைக்கமாட்டாது. அன்றியும் முன்சொன்ன மூன்றுக்கும் ஜீவகாருண்யமே துணையாயிருக்கவேண்டும்.

அஃதாவது ''அஹிம்ஸாபரமோதர்ம'' என்று சுருதி கூறுகின்றது. தன்னுயிரைப்போல மன்னுயிரைப்பார்க்கும் தவமே மேலான லாபத்தைக்கொடுக்கும். சமதிருஷ்டியுள்ளவனே எல்லாரிலும் அதிசீக்கிரமாகப்பரமாத்மாவை அந்தர்முகத்தில் நிர்குணமாகவும், பகிர்முகத்தில் சகுணமாகவும் தரிசிப்பன். ஊனக்கண்களுக்கு ரூபமாகவும், ஞானக்கண்ணிற்கு அரூபமாகவும் தோற்றப்பட்டு அகண்டாகாரசச்சிதானந்தவாழ்வைத் தருபவர் பகவானேயாம். ஞானக்கண் துலங்காத அக்ஞானிகளே யானாலும் அன்

புடன் பகவானைத்தியானிப்பார்களானால் உடனே அப்பக வான் பிரசன்னமாகி அகண்டாகாரசச்சிதானந்தமாகிய சாம்பிராச்சியத்தைக்கொடுப்பார். (பகவானை நம்பினவர் கள் பகல், வெளி, வளிபைப்பார்க்கிலும் சமீப மாயிருப்பார்) பக்திமார்க்கத்திலிருப்பவர்களைக் "குழந்தை களைக்காப்பாற்றுந்தாய் போல" பாதுகார்த்தும், வைராக் கியமான யோகமார்க்கத்திலிருப்பவர்களைப்பலவிதங்களால் சோதித்தும் சினேகபாவமாய்ப்பார்ப்பார். ஞானமார்க்கத் திலிருப்பவர்களைத்தனக்குச் சமானமானவர்களைப் போல பாவிப்பேனென்று பாகவதத்திலும் பகவான் கூறியிருக் கின்றார். அன்றி பக்திமார்க்கத்திலிருப்பவர்களைக் குழந் தைகளாகவும், வைராக்கிய முதலான அஷ்டாங்கயோகங்க ளிலிருப்பவர்களை யௌவன புருஷர்களாகவும், ஞானமார்க் கத்திலிருங்பவர்களை விருத்தாப்பியர்களாகவும், ஏற்றுக் கொள்வதோடு குழந்தைகளுக்கும், விருத்தர்களுக்கும் நான் என்பது குறைந்திருப்பது போல பக்தர்களுக்கும் ஞானிகளுக்கும் அகம்பாவம் குறைந்திருக்குமாதலால் வைராக்கியத்துடன் ஹடயோகங்களைச் சாதிப்பவர்களுக்கு நான் என்பது மிகுதியாயிருக்கும், அதனாலேயே அவர்கள் பகவானால் மிகவும் சோதிக்கப்படுவார்கள். பக்தர்கள் பகவானையே நம்பி எல்லாவற்றிற்கும் பகவானே துணை யென்று அகம்பாவமடையாமற் சந்ததம் பகவத்பாராய ணத்தால் நாட்களைக் கழிப்பார்கள்; ஞானிகள் பிராரப்தா தீனமான இச்சரீரத்திற்குச் சுகம்வந்தால் சந்தோஷ மடையாமலும், துக்கம் வந்தால் வாட்டமடையாமலும் எல்லாம் உள்ளபடி முடியுமென்று மௌன நாட்டத்தை யடைந்து யாதொன்றுக்கும் அகம்பாவங்கொள்ளாமல் நிராங்கார வஸ்துவில் ஐக்கியப்பட்டிருப்பார்கள். பக்தர் களுக்கு முக்யமானது அன்பேயாம்; சித்தர்களுக்கு முக் கியமானது வைராக்கியமேயாம்; முக்தர்களுக்கு முக்கிய

மானது மௌனமேயாம்; அன்பில்லாத பக்தியும், வைராக்கியமில்லாத யோகமும், சாந்தமில்லாத ஞானமும் நிஷ்பலமென்று சொல்லப்படும்.

எல்லாத்தர்மங்களையும் நாசஞ்செய்வது நானென்னும் அகங்காரமும் எனதென்னும் மமகாரமும் ஜீவஇம்ஸையுமேயாம், சுபத்தை விருத்திசெய்வது நிராங்காரமும் அமோகமும் அஹிம்சையுமேயாம். ஆதலால் கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்றில் எவரெவர்களுக்கு எது எது சாத்தியமோ எதன்மேலிச்சையோ அதையே உறுதியாய் நம்பி சிரத்தாபத்தியோடு அததில் ஈடுபடல்வேண்டும்.

கருத்துரை:— நிற்குணத்தியானமென்பது அனந்தங்கோடி ஜென்மாக்களில் செய்த சத்கர்ம புண்ணிய பரிபாகத்தாலும், நிஷ்காமமாய் செய்யப்பட்ட ஈஸ்வர நாம சங்கீர்த்தனத்தினாலும், சித்த சுத்தியுண்டாகி அதனால் ஞானசற்குருலாபங்கிடைக்க, அவரால் செய்யப்பட்ட சிரவணமனன நித்தியாசனபூர்வகமான மஹா வாக்கிய உபதேசத்தால் தக்ஷணமே ஆன்ம சாக்ஷாத்காரத்தை அடையப்பட்ட ஜீவன் முத்தி நிலையைப் பெற்றவர்கட்கே நிற்குணதியானமென்பது சுலபசாத்தியமன்றி ஏனையோர்களுக்கு அவைகிட்டுவதரிதாம்; ஏனெனில் (நிராசையில்லாத நாம்) பேதமனமுடைய நாம், ஒருவன் உபவாசமிருக்கவும், உண்ண உணவுக்கும் வழியில்லையென்று தபிக்கவும் நேரும்சமயம் ஏற்படுமானால் அதனால் கஷ்டப்படுவதை பார்க்க பல வீடுகள்தோறும் பிச்சைஎடுத்துண்டாவது உயிரைக்காப்பாற்றிக்கொள்வது மேலானது என்னும் நியாயம்போல, சகுண உபாசனையே செய்யவேண்டுமென்பது சுருதிதாத்பரியமாம்.

அவையாவன:- சகுணஈஸ்வரன் என்பவர்யாவர், அதன் லெக்ஷணம் என்ன வெனக்கவனிக்கின்;

1. மாயாவிசிஷ்ட சேதன ரூபகாரணப் பிரம்மம் சகுண ஈஸ்வரனும்.
2. அல்லது; அதன் உபலக்ஷணமான இரண்யகர்ப்பன் விராட், புருடன், ஹரி, ஹரன், கௌரி, கணேசன், சுப்பிரமணியன், சூரியன், இவர்களது அவதாரவடிவகாரியப் பிரமமம் சகுணஈஸ்வரனும்.
3. அல்லது; அவற்றின் பிரதிநிதி ஸ்தானத்தில் ஆலயங்களில் அர்ச்சாரூபமாய்ப் பிரதிமை முதலிய வடிவங்களாய் ஸ்தாபிக்கப்பட்டது எதுவோ அதுவும் இங்கே சகுண ஈஸ்வரனென்றே கொண்டுவழிபடுவதே சகுணத்தியானமாம்.

## பிரமாணம்.

"யாதொருதெய்வங் கொண்டீரத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனார் தாம்வருவர்." (சிவபக்தர்வாக்கியம்.)

"நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார்
கற்கின்றதெல்லாங் கடை" (விஷ்ணுபக்தர்வாக்கியம்.)



உ

# வைராக்கியத்தின் உண்மையும், நிஜபக்தியின் மேன்மையும்.

வைராக்கியமென்பதை வாசாக்ஞானமாத்திரத்தால் கொள்வதால் நாம் எவ்விதபலனையும் அடையமுடியாது. அஃதெப்படி எனில், சர்க்கரையென்று சொல்வதால் மதுரம் தோன்றுமா? அன்ன மிடுகின்றேனென்றுரைப்ப

தால், பசிநீங்குமா? பாகீரதியென்றறைவதால் பாபநிவாரணமாகுமா? தீபமென்றிசைப்பதால் இருள் நீங்குமா? கிரியாபக்தியால் நானென்பது அற்றுபோகுமா? வேதாந்தமென்றிசைப்பதால் சகல சந்தேகங்களும் நிவர்தியாய்ப் போகுமா? ஔஷதமெனச்சொல்வதால் பிணி நீங்கிப் போகுமா? குருவெனப்பகறவதாற் கிருபையுண்டாகுமா? தெய்வமெனச் செப்புவதால், அன்புண்டாகுமா? (உண்டாகாது) இவைப்போலவே வாசாக்ஞானத்தால் ஆனந்தமுண்டாகுமா? மோக்ஷஇச்சையுள்ளவர்களுக்கு முன்னம் வைராக்கியமில்லாஞானம் நிஷ்பிரயோசனமாய் முடியும். ஆனுல் அவ்வைராக்கியங்கள் சாஸ்திரங்களைக் கேட்கும் போதுமாத்திரம், அப்படி இருக்கவேண்டும். இப்படியிருக்க வேண்டும். பாபஞ்செய்யவேகூடாது. புண்ணியமே செய்யவேண்டும். எப்போதும் பகவானைத்தியானிக்க வேண்டுமென்று நினைப்பது புராணவைராக்கியம். பிரேதத்தைக்கொண்டுபோகும்போது இவ்வுலகவாழ்வு என்ன வாழ்வு, என்ன சுகம், என்ன சம்சாரம் எல்லாம் நிஷ்பிரயோசனம், பிரபஞ்சம் இந்திரஜாலத்துக்கிணையானது மசானவைராக்கியம். வேதனை பொருக்கமாட்டாமல் இனி புருஷனை புணரவேகூடாதென்று உருதியாய் நிச்சயஞ் செய்துகொள்ளும் ஸ்திரீயைப் போலக் குடும்பத்திலோர் சங்கடம் வருங்காலத்தில், இகபோகங்களில் துன்பமேயன்றி, இன்பம் அணுவளவுங்கிடையாதலால், இல்வாழ்க்கையை நீக்கிப்பேரின்பத்தை அடைய வேண்டுமென்று நிச்சயஞ்செய்துகொள்வது பிரசூதவைராக்கியம். ஒருவன் தன்குடும்பத்தில் கலகம்நேரிட உடனே அவன் இனி இவர்களுடன் கூடியிருப்பது கூடவே கூடாதென்று அயல் நாட்டையடைந்து, கோபமேலீட்டால் தனியனுயிருப்பது சலன வைராக்கியம்.

அக்கிரமஞ்செய்த இவர்களை வெட்டி இரண்டுதுண்டாக்கவேண்டுமென்கிற, குரோதத்தைக்கொண்டு தன் பிரதிக்கினையை முடித்துச் சன்யாசியாய்ப்போவது மூட வைராக்கியம். இச்சையான பதார்த்தங்களைப் புசித்துப் போக போக்கியங்களில் அமிழ்ந்து, சோம்பலின்றி இரவும் பகலும் முழன்று, எதிர்த்தவர்களை வென்று, யாதொன்றுக்கு மஞ்சாதவனாய்க் கர்வமடைந்திருப்பது; இராக்ஷஸ வைராக்கியம். பரமசிவன், தன்னையடைந்த பிர்மஹத்தியை, விஷ்ணுவாலகற்றிக் கொண்டதால், நாராயணனே, ஆதிதெய்வமென்றும். திருமாலும் பிர்மாவும் அடிமுடியைத்தேடிக்காணாததால் பரமசிவனே ஆதிதெய்வமென்றும். எங்களுடைய சமயத்திற் பிரவேசித்துக் காரணகுருவைத் தொழுபவர்க்கே, மோக்ஷமுண்டென்றும்தேவதைகளைத்தூஷிப்பது மதவைராக்கியம். உண்மையான காரணகுருவைத்தேடி அவரருளால் தனதெதார்த்தஸ்வரூபத்தையும் பிரம்மத்தையும் உணராமல் பொய்யான காரியகுருக்கள் போதிக்கும் போதனையால் நான் என்பது விருத்தியாகும் நிலைகளில் நம்பிக்கைவைத்திருப்பது அஞ்ஞானவைராக்கியம். அநித்திய மலபாண்டதேகத்தை, என்றைக்குமழியாமல் வைத்துக்கொள்ளும் பொருட்டு காயகற்பங்களைப் புசித்து, பிராணவாயுவையடக்கி, நாதாந்தவசமாகிச் சோதியைத்தரிசித்து, முடிவில் சூன்யபாவத்தையடைவது அடவைராக்கியம். வேதாந்தசாஸ்திரங்களைச் சற்குருமுன்னிலையில் விசாரித்து, பிரபஞ்சம், அநித்தியமென்றும், பிரம்மமேதானென்றும், எல்லாம் பிரம்மமென்றும், திடப்பிரக்ஞையால் ஆனந்தவசமாகும் ஞானநிஷ்டையைச்சாதிக்காமல் இறுமாந்திருப்பது அபலவைராக்கியம் எனப்பலவகைப்படுவனவாகும். வைராக்கியங்களைப்பற்றிச் சொல்லப்புகின், இன்னும் விரிந்துசெல்லும். இந்த அஞ்ஞான வைராக்கியங்களினால் கற்பகாலங்களிலும் ஆனந்த

மடையக்கூடாது. ஏனெனில், நானென்னும் மதமானது மதத்தையே தருமன்றி, இதத்தையும், சம்மதத்தையும் ஒருநாளுந்தராது. ஞானியானவன், போர்க்களத்தில் தன்னை எதிர்த்தவன் எவனானாலும், அவனை எதிர்த்துச் செயம்பெறும் அதிசூரனைப்போலவும், நியாயசபையில் உற்றார், எளியார், வலியாரென்ற பாரபக்ஷம் பார்க்காமல் நீதிவழங்கும் உண்மை நியாயாதிபதியைப்போலவும், சகலரும் சம்மதிக்கும் சம்மதமான ஞானமார்க்கத்தைக்கண்டுரைப்பதன்றி, பந்தியிற் சகலருக்கும் சமமாகப்படைக்காத அநீதனைப்போலவும், ஈ., யெறும்பு முதலான ஜீவர்களிடத்து, சமபாவம் பார்க்காத அஞ்ஞானியைப்போலவும், தன்மக்கள் பிறர்மக்களென்று சிசுக்களிடத்தில் துவிதபாவமாய்ப்பார்க்கும் உலுத்தனைப்போலவும், பிறர்மானம் தன்மானமென்று நினையாப்பாவியைப்போலவும், தன் ஜீவனைப் போலவே பிற ஜீவர்களையும் பார்க்கா அசடனைப்போலவும், பூஷணைக்கு மகிழ்ந்து தூஷணைக்குக் காதுகொடா அவிவேகியைப் போலவும், மனதிலொன்று வாக்கிலொன்றுமாயிருக்குங்குரோதியைப் போலவும், சைவமே முக்கியம் வைஷ்ணவமே பிரதானமென்பனபோன்ற சொற்களைச் சொல்லக்கூடாது. ஏனெனின், ஆயிரம் ஞானிகளின் மார்க்கம் ஆயிரம் விதமாக இருக்கும். சாக்கிர, சுவப்பன, சுழுப்தி, துரியம், துரியாதீதமென்னும் ஐந்தவஸ்தைகளும் சகல ஜீவர்களுக்கும் பொதுவாயிருக்கின்றது. இவ்வவஸ்தைகளைந்தையும் சற்குரு முன்னிலையில் நன்குய் விசாரித்தறிந்தாலொழிய ஞானமார்க்கந்தெரியாது. ஞானமார்க்கம் புலப்படாதவர்களுக்கு நான் என்பதற்றுப்போகாது, நான் என்பதற்றுப்போவதே ஞானமென்றுணரத்தகும். ஞானமில்லா பக்தியும், வைராக்கியமும், யோகமும், தியானமும், மோனமும் பிரயோஜனப்படாது.

மோக்ஷமென்பதை சுலபமாய் அடையவேண்டுமானல், அதற்கு ஞானவைராக்கியங்கள் முக்கியமாய் வேண்டற் பாலன. அவையாவன, அணுமுதல் பிர்மாண்ட பரியந்தம் பிர்ம்மமே நிறைந்திருக்கிறதென்றும், பரிபூரணமாகிய பரப்பிரம்மத்தைவிட வேறில்லையென்றும், என்றும் இருப் பது பிரம்மமே யென்றும், நானென்னும் அகம்பாவத்தை யும் எனதென்னும்மமபாவத்தையும், தலையெடுக்காமல் தவளையையுண்ணும் சர்ப்பத்தைப்போல புசித்து விடுவது பூரணவைராக்கியம். கானற்சலத்துக்கிணையான பிரபஞ் சத்தைச் சுத்தமித்தை என்று உன்னி, ஸ்திரியாதி போகங் களைக் காகத்தினெச்சத்தைப்போலெண்ணி, மனதில் வரு கிற நினைப்புகளையெல்லாம் மாய்த்து காமக்குரோதாதிக ளென்னுங் கள்வரை அடியோடும் வெட்டிச்சாய்த்து, குடும் பத்தை விருத்திசெய்யவேண்டுமென்கிற ஜீவ இச்சையைத் தேய்த்து, ஆ ன ந் த சமுத்திரத்தில் கருவிகரணாதிகளைத் தோய்த்து, தன்னையறிந்து பிரம்மமாத்திரமாயிருப்பது எதார்த்தவைராக்கியம். சற்குருவின்பால் சிரத்தாபக்தி உடையவனுய் எப்போதும் சாதுசங்கத்தை விடாமலனு சரித்து சந்ததம்தானே பிரம்மமென்று மனனம்பண்ணி சரீரபாவனையை நீக்கி சங்கல்பவிகல்பங்களைப் போக்கித் அ க மு க ந ா ட் ட த் தி ல் பரப்பிரம்மத்தை நோக்கித் தன்னைப் பிரம்மத்துக்குள்ளாக்கி நிர்விகல்பனுய், அகண் டானந்த நிராமயனுய்ச் சாக்ஷியாயிருப்பது சத்பாவவை ராக்கியம். கர்மங்களெல்லாம் குணங்களால் பிரவிருத்திக் கிறது. நானேதுணுதிதன் கர்ம, பக்தி, யோகங்களால்பிர யோஜனமில்லையென்று நிர்ஹேதுவாய் ஒன்றையும் கேட் காவாக்குமௌனமும், ஒன்றையும் இச்சியா ஜீவமௌன மும் பெற்றுச்சமாதி நிஷ்டாபரனுய், அத்வைதமாயிருப் பது அபாவவைராக்கியம். எல்லாவற்றையும் சொற்பன மாய் நினைத்துச்சுகதுக்காதீதனுய், நான். நீ. யென்னுந்

துவிதபாவமில்லாதவனுய்த் தானே தானுய்ப் பிரபஞ்ச எத்தனத்தைத்தள்ளிச் சொப்பனத்திலும், இகபோகங்களை நினையாம லிருப்பது ஸ்தாபனவைராக்கியம். சுகதுக்க ஆதீனமயமான இச்சரீரம் பிராரப்தாதீனமென்றும், பிராரப்தபயனே சுகதுக்கமென்றும், தேகபோஷணையையும், தேகபீதியையும் விடுத்து விதிநிஷேதங்களைத்தள்ளித் துக்கமுஞ்சுகமும் வந்தால் சமமாய்ப்பார்த்து, சகலசந்தேகங்களையும் பேர்த்து, துரியதிருஷ்டியை மேவியிருப்பது திடவைராக்கியம், பிராரப்தமென்னும் ஆசனத்தின்மீது உறுதியாயிருந்துகொண்டு ஞானுக்னியால் அஞ்ஞான ஆவரண விக்ஷேபாதிகள் பஸ்மமாகிட, காலபயத்தை நினைக்காமல், பித்த, உன்மத்த, பால, சுபாவத்தையடைந்து, நிர்த்தொந்தனுயிருப்பது விச்சிரமவைராக்கியம். அயர்ச்சி, நித்திரை, நிந்தாஸ்துதியைவிட்டுத் தேகஸ்மரணைகெட்டு, அகண்ட சிரவணமனனங்களாற் பூர்த்தியடைந்து பரமாத்மாவில் ஐக்யமாய் மவுனமாயிருப்பது சம்மதவைராக்கியம். பேரிடி விழுந்தாலும் பயப்படாமல், நான விஞசன், அவிசேஷன், அதூலன், அசலன், அனுமயன், பரிபூரணன் ஆதலால் எனக்கு ஜெனனமேது, மரணமேது, பாவமேது, புண்ணியமேது, நரகமேது, மோக்ஷமேது, எனக்குள்ளாகவே இப்பிரபஞ்சம் முழுதும் முழுமித்தையாய் உதித்தொடுங்குகிறதென்று நிற்சலனமாயிருப்பது விசாரவைராக்கியம். யாதொருவியாகூலமுமில்லாமல், பிர்மம், நிர்வசன அனுதி, அதற்கேதுஉபாதி என்று நிர்ப்பந்த, நிர்ச்சிந்தனுய் ஐக்கிய சுபுத்திபுடையவனுய் பிரம்மம், நிர்விகாரம், நமக்கேது விகாரம் என்று, கல்பனு நாமரூபத்தைக்கெடுத்து சுயம்புவாய்ச் சாவகாசமாய் ஒரே நிதானமாய் நிவாததீபம் போலவும், நிஸ்தரங்கசமுத்திரம் போலவும் இருப்பது நிர்வானவைராக்கியம் எனப்பலவாம். இன்னும் பல விதங்களாக ஞானவைராக்கியங்களைப்பற்றி சாஸ்திரங்களில்

கூறப்பட்டிருக்கின்றன. மேற்கூறிய ஞானவைராக்கியத்தால் அடையப்பெறுவது, வஸ்து லாபபாக்கியம். வஸ்து லாபபாக்கியத்தால் வருவது மேலானயோக்கியம். மேலான யோக்கியர்க்கு உரைக்கத்தகுந்தது மகாவாக்கியமாகும்.

மேற்சொன்ன வைராக்கியங்களன்றி மற்றவைராக்கியங்களெதுவெது மனோவாக்குக்குக்கோசரமாயிருக்கின்றதோ அதெல்லாம் கற்பிதமென்றே நினைக்கவேண்டும். மனோவாக்குக்கு அகோசரமாய் வேதாதீதமாய், மூவரும், தேவரும், மற்றியாவரும் போற்றும் பொருளானது எதுவோ, அவ்வஸ்துவே சத்யக்ஞானனந்த நித்ய நிர்மலமாயிருக்கும், பரப்பிர்ம்மமென்றும், பரப்பிரம்மமே, ஆதிதெய்வமென்றும், இதில் ஐக்கியப்படுவதே ஆனந்தமென்றும், ஆனந்தமே மோக்ஷமென்றும் சொல்லப்படும். சந்திரகிரணத்தைப்புசித்து திருப்தியடையும் சகோரப்பக்ஷியைப் போல, ஞானரசனையான பிரம்மானந்தத்தைப் புசித்து நானென்பது நசிக்கத்துரியபூமியில் வசித்துப் பரப்பிரம்மத்தில் ஐக்கியப்பட்டுயிளைப்பாற்றி, இருத்தலும் எழுதலும் மறந்து, பிரம்மானந்தம் நிறைந்து நடத்தலும் பேசலும் குறைந்து தேகாபிமானத்தைத்துறந்து சொஸ்தனுய்ச் சகோரபக்ஷிக்குணவாகியும், எங்கும் சீதளப்பிரகாசமாய் நிறைந்திருக்கும் சந்திரனைப்போல தனக்குள்ளே குளிர்ச்சியடைந்து அந்தக்கரணாதிகளுக்குச்சீதளத்தைத்தந்து குறையாமல் பரிபூரணஸ்வரூபமாகிப் பிரபஞ்சமயமாகாமல் அதிகுப்தனுய் இருப்பதே நிஜபக்தியென்னலாம். இதுவே, ஞானமார்க்கம் என்றும், சுத்தசன்மார்க்கமென்றும், பெரியோர்களுரைப்பார்கள். அதுவே எங்குந்திருவருள் பெற்றின்புறுவதென்பதான வேதத்தின் சாரமாய திருப்பாவை முப்பதன் கருத்துமாகும்.

வங்கக்கடல் கடைந்த மாதவனைக்கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப்பறை கொண்டவாற்றை யணிபுதுவைப்
பைங்கமலத்தண்டெரியல் பட்டர்பிரான் கோதை
சொன்ன
சங்கத்தமிழ்மாலை முப்பதுந்தப்பாமே
இங்கிற்பரிசுரைப் பாரீரிரண்டுமால்வறைத்தோள்
செங்கட்டிருமுகத்துச் செல்வத்திருமாலால்
எங்குந்திருவருள் பெற்றின் புறுவரெம்பாவாய்
(ஆண்டாள்திருப்பாவை)

---

## துறவு என்பது ஞானமடைதலே.



கடவுள் சாக்ஷாத்காரத்துக்கு ஸ்திரமான ஞானவிசாரமே அவசியமென்பதன் கருத்தும், துறவு என்பதைப் பற்றி குருசிஷ்ய சம்வாதரூபமாய் சம்க்ஷேபமாகவும் இதில் விளக்கப்பட்டிருக்கிறது.

சிஷ்யன்வினா:— ஞானஞ்ஞானங்களை விசாரஞ் செய்த பின் சங்கத்துவமான நாட்டில் குடும்பவிவகாரத்திலிருப்பதால் விவகாரமே சித்திப்பதன்றி சாந்திக்கு ஏதுவில்லாமற் போவதால் நிற்சங்கனாய் காட்டிற்சென்று ஏகாந்தனாகவிருப்பதே மோக்ஷ நிஷ்டைக்கு யோக்கியமென்று சொல்கின்றார்களே அதன் விபரமென்ன?

**பிரமாணம்.**

பொல்லாதமிலேச்சருக்கும் விதேக
முத்திதருஞானபூமி யென்று

நெல்லாகி முளைக்குமெனத்தண்டுல மாக்கி
யதுருவே நீர் சொன்னீரே
இல்லாளுங் குடும்பம் விட்டுச் சன்னி
யாசம் புகுந்தே காங்கியானே
ரல்லாமன் மூத்திபெறுரென்று சிலர்
சொலுமயக்க மகற்றுவீரே.

(கைவல்யம்.)

குருவிடை:— சற்சனரால் மதிக்கப்பெற்ற ஞானபுத்திரா! நீ கேட்டகேள்வி மிகுசிறப்புடையது. அந்த சங்கை தீரயாம் கூறுவோம் கேள், கண்களை மூடாமல், கவசனை யால் விண்ணைமூட நினைப்பது போலவும், இடியைத்தன் சிறுகால்களால் தாங்கக்கருதிய சிறு குருவியைப்போல வும், கர்மம் செய்துகொண்டே கர்மம் தேடுவதுபோல வும், நானென்பதை மாற்றுமல் ஞானநிஷ்டை சாதித்து நாடென்றுங் காடென்றும் பேதவெண்ணங்கொண்டு பிர்ம்மநிஷ்டை சாதிக்கலென்பது, அபேதலட்சணத் தோடுங்கூடிய ஆத்மாவிற்குப் பேதகாட்டமல்லவோ சித்திக்கிறது.

வினு:— எனதென்னும் பொருள்களிருக்கும் பரியந்தம் நானென்னு மகந்தையும் அதுவிதுவென்னும், துவித பாவமும் போகாது. இப்பேதபாவங்களை நீக்குவது நிர்விகற்ப நிஷ்டையாம், இந்நிர்விகற்ப நிஷ்டை நிர்ச்சங் கல்பத்தால் லபிக்க வேண்டுமாதலால், ஏகாந்தமான காடே மௌனநிஷ்டைக்கு உரியதாயிருக்கிறது.

விடை:— தன்னையறிந்து தானுயிருப்பதே பிரம்மநிஷ்டை யன்றிக் காடேகெதியென்று ஏகாந்தமாய்த் தனித் திருப்பது நிஷ்டையல்ல. காட்டினிற்றனித்து தவஞ் செய்வதால் அஞ்ஞானநிவர்த்தியாகாது; அகமமதை

நீங்கிப்போகாது என்று, மெய்ஞ்ஞானிகள் நாடென்றும், காடென்றும், சம்சாரமென்றும், சன்னியாசமென்றும், உன்னமல் திடமனதோடு நிருவிகற்ப நிலையையே பொருந்தியிருப்பார்கள். அன்றி நீ நினைத்தபடி சம்சாரத்தை வெறுத்து கானகத்திற்போய் வசித்தற்கு இச்சியார்கள்.

வினு:— சாட்சியையறிந்து சர்வசாக்ஷியில் ஐக்கியமானவர்கள் சம்சாரத்திலிருப்பரேல் சமாதிசாதனைக்கு விக்கினம் நேரிட்டு சாட்சாத்காரத்தையிழந்துவிட நேரிடும். ஆதலால் சகஸானுபூதியைப் பெற்றோர் சம்ஸார அபேக்ஷையைக் கனவிலுங்கொள்வது கூடாதே.

விடை:— இதுவேண்டுமென்கிற சங்கல்பமும் இதுவேண்டாமென்கிற விகல்பமுமற்றிருப்பதே சகஜநிஷ்டையன்றிக் காட்டையபேக்ஷித்தும் நாட்டையுபேக்ஷித்தும் இருப்பது நிஷ்டையாகாது.

வினு:— சங்கல்ப விகல்ப மற்றிருப்பவர்க்கு வியவகாரம் எவ்விதமாய் நடக்கும். விவகாரத்துக்குதவாதவன் நாட்டிற் சமுசாரத்திலிருப்பதாற் பிரயோசனமென்ன? “பிணத்துக்கு மணம் செய்வதுபோல” அநித்திய துக்க, அசுத்தமான இத்தேகபோஷணையைக்குறித்துப் பலசங்கடங்களுக்கு இடமான நாட்டிலிருத்தல் கூடவே கூடாது.

விடை:— வியவகாரத்திலிச்சையற்றவன் சமாதிசாதனம் செய்வானுயின் அச்சாதனமும், வியவகாரமல்லவோ, இவ்வியவகாரமுள்ளவனுக்குச் சம்சார வியவகாரமுமிருக்கட்டுமே.

வினு:— சமாதி ஓர் வியவகாரமானுலும் சமஸ்தசங்கல்ப சஞ்சலங்களேயும் மாற்றிவிடும். சம்சாரவியவகாரம்

சமஸ்தசங்கல்ப, சஞ்சலங்களேயும் கொடுத்து, என்னேர மும் அல்லலுறச்செய்யுமல்லவா?

விடை:— சச்சிதானந்தப்பொருளே தானுயிருக்க நிஷ்டாசாதனம் என்ன காரணத்தால் செய்யவேண்டும்.

வினு:— சாக்கிராவஸ்தையில் சுழுப்திநிலேயையடைவதல்லவோ பிர்மநிஷ்டையென்று உத்தமர்களுரைக்கின்ருர்கள். அவ்வாறின்றி சச்சிதானந்தப்பொருள் தானுயிருக்கிறேனென்பதனுல் தடையற்றவானந்தம் உண்டாகுமா?

விடை:— சாக்கிராவஸ்தையில் இந்திரியங்களின் சேஷ்டையும் சுவப்பனுவஸ்தையில் மனேவியாபாரத்தையும் சுழுப்தியவஸ்தையில், சூனியத்தையும் கண்டு களித்திருப்பதே, ஆனந்தமும் ஸ்படிகச்செயல்போல் ஒன்றிலும் ஒட்டியும் ஒட்டாமலும் இருப்பதே நனவிற் சுழுப்திநிலே என்றும், சுருதிகள் முறையிடுகின்றதன்றி சுத்தசூன்யமான சுழுப்தியைப்போலிருப்பதே தடையற்றவானந்தமென்றும், நனவிற்சுழுப்திநிலேயென்றும் நீ நினேத்திருப்பது தப்பாகும்.

வினு:— சாக்கிராவஸ்தையும், சொப்பனுவஸ்தையும் பிரபஞ்ச வியாபாரத்தில் அமிழ்த்தி, விஷயங்களென்னும் மிருகங்களுக்கு ஆகாரமாக்கி மிகவும் வேதனேயடையும்படி செய்யும் ஆதலால் பிரபஞ்சவியாபாரமிழந்த சுத்தசூன்யமான சுழுப்தியவஸ்தைக்கிணேயான சமாதியே உத்தம சமாதியேயன்றி வேறென்னவிருக்கின்றது.

விடை:— திருடனுக்கு முரடனே குருவென்பதுபோலப் பிரபஞ்சவியாபாரத்திலிருந்துகொண்டே ஜனகரைப் போல விஷயங்களென்னும் மிருகங்களேத் திடஞானமென்னும் வாளால் கண்டித்துச் சுகதுக்கங்களேச் சட்

டைசெய்யாமல் உதாசீனமாயிருப்பதே பரமசாந்தியன்றிச் சூன்யமாயிருப்பது சமாதியல்ல.

வினு:— அநேக ஜென்மங்களாய் வாசனையேறியிருக்கும் மனக்குறங்கை, சகலப்பற்றுகளுமற்ற சுகப்பிர்மரிஷியால் ஜெயிக்கப்பட்டதன்றி சுழுப்திநிலையில்லாமல், தானே பிர்மமென்கிற திடஞானமுள்ள ஜெனகரால் ஜெயிக்கப்பட்டதல்லவே.

விடை:— "கோலாடினல் குரங்காடுவதுபோல" திடஞானமுள்ளஜனகரால் மனநாசமடைந்ததேயன்றி, புறப்பற்றற்று காடே கெதியாயிருந்த சுகரால் மனோநாசமடையவில்லையே.

வினு:— திருக்குவாயிருந்து திரிசியத்தை அகற்றவேண்டுமேயன்றித் திரிசியத்திலிருந்து கொண்டே திரிசியத்தையெப்படி நீக்கக்கூடும். விஷந்திர விஷத்தையே கொடுத்தால் மரணமேஹேதுவல்லவோ ஏற்படும்.

விடை:— 'விஷந்திர வேறோர் விஷமான ஔஷதமுட்கொள்வதுபோல' பயமானவிஷய இந்திரிய கரணாதிகளை நிர்ப்பயமான திடஞானத்தாற்கொல்பவனே சமர்த்தனன்றி, எப்போதும் நிஷ்டையிலிருந்துகொண்டு எங்கே விஷயங்களென்னும் மிருகங்கள் வரப்போகிறதோவென்கிற பீதியே குடிகொண்டிருப்பவனுக்கு அப்பீதியே பலிதமாகுமன்றிப் பிர்மானந்தம் ஓர் காலத்தும் கிட்டாது.

வினு:— சன்யாசியாகிச் சதாநிஷ்டையிலிருப்பவனையே சஞ்சலத்துக்குட்படுத்தும் விஷயங்கள். சம்ஸாரவியாபாரத்திலிருப்பவனை யென்னதான் செய்யாது, பெருவெள்ளத்தில் வீழ்ந்த சருகுசலனமின்றி ஓர் இடத்திலிருக்கவுங்கூடுமா ?

விடை:— திடஞானமில்லாதவன் எத்தனைநாள் அந்தர்திருஷ்டியுடனிருந்தாலும் கருவிகள் பகிர் முகத்திற்குக் கொண்டுவந்து பலதுன்பமடையச்செய்யும். பெருத்த வெள்ளத்தில் வீழ்ந்த பருத்த கல்லானது சற்றுமசையா

மலிருப்பதுபோல் விஷயாதிவிகாரங்களெத்தனை வந்தாலும், சகிக்காத்துன்பம்தந்தாலும் நிர்ச்சலனமாயிருப்பவனே, பிர்மானந்தானுபவம்பெறுவான். அன்றி திடமில்லாதவனுடைய மடமை ஒருக்காலும் நீங்கவே நீங்காது.

வினு:— எவ்வளவு திடமிருந்தாலும் நிர்சங்கனாய் இருந்து சதாபிர்மானுசந்தானஞ் செய்யாமற்போனால் அவன் மாயாந்தகாரமென்னும் கூபத்திலமிழ்ந்து போவதற்குச்சந்தேகமேயில்லை.

விடை:— பிர்மத்தையுன்றி மாயையென்பதொன்றுண்டாயிருந்தாலல்லவோ சதாநிஷ்டையிலிருந்து அதை நீக்கவேண்டும். தன்னிழல் தன்னோடெதிர்த்துயுத்தம் செய்யுமென்பதுபோல, இல்லாமாயையும், இல்லா அகந்தையும் ஏற்படுத்திக்கொண்டு சதாநிஷ்டையிலிருக்க வேண்டுமென்றுரைப்பது, இல்லாநிழலோடு எந்நேரமும் போராடுவதால் இளைப்பே பிரயோசனமாவதுபோல, என்றுமில்லாமாயையை இல்லையென்றறிந்துகொண்டு மௌனமுற்றிருக்காமல் என்னேரமும் நியதிகளேந்துகொண்டிருப்பது என்றும் நீங்காத துன்பத்தையல்லவோ தரும்.

வினு:— நியதிகளையாமலும், ஏகாக்கிரசித்தமாகாமலும், சாட்சியாயிருக்காமலும், சகஸஞானம் பொருந்துவதெப்படி?

விடை:— நேதிசெய்யச்செய்யப் புற்றினுள்ளிருந்து புறப்படும் ஈசலைப்போல் மிகவும் விஷயங்கள் புலப்பட்டே நிற்கும். ஏகாக்ரசித்தமாக்கவாக்க, "அடிக்க அடிக்கப் பந்துயெழும்பவதுபோல" மனம் சஞ்சலப்பட்டு நிற்கும். சாக்ஷியாயிருக்க இருக்கக் "குணங்களெடுத்த சுணங்கன் வாலைப்போல" சரீராதிகளும் தானென்கிற

பிரமையுமே வந்துகொண்டிருக்கும். ஆகலால் அவித்தையென்னும் அகந்தையையும் மித்தையென்னும் மாயையும்; 'ரஜ்ஜுசர்ப்பம்போல' முழுமித்தையாய் எண்ணித்தானே பிர்மமென விசாரஞானத்தால் கெம்பீரத்துடனிருப்பதே பிரம்மானந்தமாம்.

வினு:— யாதொரு சாதனையுஞ்செய்யாமல் விசாரஞானத்தால் தானேபிர்மமென்றிருப்பதால் துக்கமயமான விஷயாதிகளை வெல்லக்கூடுமோ?

விடை:— உயிரோடிருக்கும் பசுவே புலியைக்கொல்லாதாயின் இறந்துபோன பசுவா கொல்லப்போகிறது. அதுபோல நித்தியமாகியும், நிஷ்களமாகியும் அகண்டானந்தமயமாகியும் விளங்காநின்ற ஆத்மாவை விஷயாதிகளென்னசெய்யக்கூடும். 'கொழுத்தபசுவும் புலிமுன் வர அஞ்சுவதுபோலத்' திடஞானத்தால் பூரணத்தையடைந்திருக்கும், ஞானவான்முன் விஷயங்கள் வரவேவராது, வந்தால் புலிமுன் வந்த பசு எப்படி அபாயமடையுமோ அப்படியே அழிந்துபோகும்.

வினு;— 'விபசாரியோடுகூடிய சம்சாரியுங் கெடுவதுபோல' அஞ்ஞானிகளோடுகூடிய மெஞ்ஞானியும் விஷயாதிகளிற்சிக்கி மனோசஞ்சலத்திற்காளாகி துக்கமயனாய் மாறிவிடமாட்டானோ?

விடை-— திடமுள்ளவள் பலவிபசாரிகளோடு கூடியிருந்தாலும் கற்பழியாமலேயிருப்பாள். திடமில்லாதவள் விபசாரிகளின் கூட்டுறவு இல்லாதிருந்தாலும் தானே பதிவிரதைத்தன்மைக்குப் பழிதேடிக்கொள்வாள் அதுபோல திடமுள்ள ஞானி அஞ்ஞானிகளோடு சூழ்வுற்றிருந்தாலும் பரிபூரணஞானத்தையிழக்கமாட்டான். திடமில்லாதவன் ஏகாந்தனாயிருந்தாலும் இழந்துவிடுவான்.

வி:— ஒருவன் சம்஘ார வியாபாரத்திலிருந்து கொண்டே எப்படி பூரணஞானியாகக்கூடும்?

விடை:— பிராமணன் தோட்டிவேஷம்போட்டுக்கொண்டு நாட்டியமாடினும், அடிக்கடி, நான், மறையோன் என்று நினைத்துக்கொள்ளவேண்டுமோ? அப்படி நினைக்காவிட்டால் தோட்டியாய்ப் போய்விடுவானோ? நாடறிந்த பிராம்மணனுக்கு பூணூல்வேண்டுமோ? நானென்னும் அகந்தையற்ற பின்னும் நானென்னும் அகங்காரக்கிரந்தியை வைத்துக்கொண்டு அகம் பிர்மமென்னும் பிர்மானுசந்தானம் பண்ணவும் வேண்டுமோ? 'நாடறிந்த பிராம்மணனுக்குப் பூணூலில்லாவிட்டாலும் பூசுரனென்றேயாவராலும் பூஜிக்கப்படுவதுபோலவே' நானெனதென்னும் அகமமதையற்றவன்யாதோர் அனுசந்தானஞ்செய்யாவிட்டாலும் எல்லோராலும் பூசிக்கப்பட்டுப் பிர்மானந்தானுபோகியாகவேயிருப்பான்.

வி:— ஜகதீஸ்வரனுக்கு இணையானவனானாலும் நாள்தோறும் தான்பிர்மமென்கிற அனுசந்தானம் செய்யானாகில் அவன் அஞ்ஞானியாய்ப்போவதற்குத் தடையேயில்லை. தனுவாதிகளை நானெனக்கொண்டிருக்கும் அகந்தை கொஞ்சத்திற்போகவேபோகாது.

விடை:— விளக்கைக்கையில்வைத்துக்கொண்டு இருட்டேயிருவென்றால் இருக்குமோ? பூனையை அருகில் வைத்துக்கொண்டு கிளியே பேசென்றால் பேசுமோ? அதுபோலவே தேகாதிகள் தானெனும் அஞ்ஞானத்தை அத்தியந்தநாசஞ்செய்து பிரம்மமே தானென்றறிந்தபின் அஞ்ஞானமே இருப்பாயாகவென்றால் இருக்குமா? ஜீவேஸ்வரஜெகத்தாதிகள் பொய்யென்றறிந்தபின் மாயையைவாவென்றால் வருமா? " நபும்ஸகனென்றறிந்த

ஒருபெண்ணின் முன் நான் புருஷனென்றுசொல்ல நாணமடைந்த பேடியைப்போல" பிர்மம் சத்தியமென் றும் மாயை அசத்தியமென்றும், பிர்மம் நிர்விகல்ப மென்றும், மாயை சங்கல்பவிகல்பமென்றும், தானே பிர்மமென்றும், பிர்மமேதானென்றும், சற்குருநாதன் சந்நிதானத்தில் சந்தேகமறத்தெரிந்தவனுக்குச் சங்கல்ப மேது? விகல்பமேது? பந்தமேது? மோட்சமேது? ஜெனனமேது? மரணமேது? நாடேது? காடேது? தானமேது? தவமேது? சமுசாரமேது? சன்னியாச மேது? 'என்றும் செத்தாட்டுக்கல் போல' ஜெகத்திலிருப்பவன் முன் மாயையின் சாமார்த்திய மணுவும் நடக்குமா? எதை நினைத்தமாத்திரத்தில் சகலபாபங்களும் நிவாரணமாய்ப்போகுமோ? எதை ஆராயின் "அனங்கனுவானோ?" எதனுடையதரிசனத் தால் தன்னைமறப்பானோ, ஞானர்ச்சனைக்குகந்ததும் ஏக மாயிருப்பதும் எதுவோ? அதையே அறியவேண்டும். மிகவும் பிரியத்தைக்கொடுப்பதாயும், அகண்டானந்தத் தைத்தருவதாகியும், ஓர் தரம் தரிசித்ததே ஆயுளிறுதி பரியந்தம் நினைந்துநினைந்து வியப்படைவதாகியும், மகா வாக்கியங்களுக்குலட்சியமாயும் விளங்கா நின்றதெது வோ, அதையே தியானிக்கவேண்டும். எதனிடத்தில் இந்த அண்ட, பிண்ட, பிர்மாண்டங்களெல்லாம் சிருஷ்டி ஸ்திதிலயங்களைப் பொருந்தியிருக்குமோ, பூதபவுஷ்ய வர்த்தமானமென்னுந் திரிகாலங்களிலும், பின்னமின்றி எந்தப்பொருள் அத்துவிதமாயிருக்கின்றதோ, எது அவாங்மனோகோசரமாயிருக்கின்றதோ, எதுமேல், கீழ், நடுபக்கமும் நாமரூபமற்றிருக்கின்றதோ, அது பிர்ம மென்றுரைக்கத்தகும். எது "பார்க்குமிடமெங்கு மொரு நீக்கமற நிறைந்திருக்கும் பரிபூரணவஸ்துவோ,"

அப்பரப்பிர்மத்தை வணங்குவதெப்படி? இணங்குவதெப்படி? இப்படிப்பட்டதென்று வாக்கினாற்சொல்லவும் மனத்தினால் நினைக்கவும் கூடாத வஸ்துவை வாழ்த்துவதெப்படி? மனனம் செய்வது எப்படி? எது ரூபமற்று இருக்குமோ, எது நாமத்துக்கு அப்பாற்பட்டிருக்குமோ அதைப் பார்க்கவேண்டும். துதிக்க வேண்டுமென்று பலதரம் பேசுவதனாற் பிரயோசன மேது? நாமரூப குணங்குறிமுதலியவைகளை நீக்கியபின் எந்தப்பொருள் மீதியாயிருக்கின்றதோ அந்தப்பொருளாகி சமஸ்தவஸ்துக்களிலும் சமத்துவம் பொருந்தியிருப்பதே மேன்மையான பிரம்மஞானநிலையாகும். விருப்பு வெறுப்பற்று சுகதுக்கரகிதனாய் நானென்னுமகங்காரக்கிரந்தியைக்களைதலே பிர்மநிஷ்டையாகும். ஈது உண்மை. இதுவேசத்தியம்.

"சற்குருபாதமேகதி-சந்ததமவரையேதுதி"

நன்றாய் ஞானங்கடந்துபோய் நல்லிந்திரிய
மெல்லாமீர்த்து
ஒன்றாய்க்கிடந்தவரும் பெருப்பாழுலப்
பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்
களைந்துபசையற்றால்
அன்றேயப்போதேவீடு அதுவே
வீடுவீடாமே. (நம்மாழ்வார்.)

சந்ததமும் வேதமொழியாதொன்று
பற்றினதுதான்வந்து முற்றுமெனலால்
சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது
சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தையறியார்க் கிதுபோதிப்பதல்லவே
செப்பினும் வெகுதர்க்கமாம்

திவ்யகுணமார்க்கண்டர் சுகராதிமுனிவோர்கள்
சித்தாந்தநித்யரலரோ
இந்திராதிதேவதைகள் பிரமாதிகடவுள
ரிருக்காதிவேதமுனிவர்
எண்ணரியகணநாதர் நவநாதசித்தர்க
ளிரவிமதியாதியோர்கள்
கந்தருவர்கின்னரர் கள்மற்றையர்களியாவரும்
கைகுவித்திடு தெய்வமே
கருதரிய சிற்சபையிலானந்த நிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

(தாயுமானவர்.)

---

௨

# தியானமென்பதன் முக்கியகருத்து.



சகலமதத்தரும் எதனைத்தெய்வமென்றாலும், சொல்லாலன்றி, பொருளாலன்று. சொல்லாலெனின் அறிபடு பொருளும், நினைவும், பாழுமாம். ஆயின் பொருளாவது என்ன. கடவுளாகிய மெய்யுணர்வு அஃதாவது, படிப்பரணைப்படிப்பதெந்தவுணர்வோ அந்தவுணர்வு, அந்தவுணர்வே தெய்வமன்றி வேறெனப்பார்ப்பதெல்லாம் சோதனையில் நிலையுறாது தத்தளித்தழியும். ஆதலால், அறிவே தெய்வமெனப்பெற்றும். எல்லாவுயிரும் அறிவுருவாதலின் ஒவ்வோருயிரும் தன்னைத்தான் யாரெனச்சிந்தித்தல் தியானம் அஃதே (சிவோகம்) என்னும் தனது நிஜசொரூப நிலையை விளக்குவிக்கும். அஃதின்றி தேகம்நான் இந்திரியம் நான், பிராணன்நான், மனம்நான், புத்திநான் சித்தம்

நான், அகங்காரம்நான், என்பனவெல்லாம் அஞ்ஞான கிருதமேயாம். அஃதாவது தேவதைகட்கும் நான் என்பது அருதகினால் தேவதாசரீரம் நான் என்றும் மானிடவர் மனுஷசரீரத்தை நான் என்றும் விலங்கு, பக்ஷி, ஊர்வன, நீர்வாழ்வன, மரம், செடி, கொடி புல்லாதிகளும் தத்தம்சரீரத்தையே நான் நான் என்று ஸ்மரித்துக்கொண்டு இருக்கிறது. அதைநாம் ஊன்றிக்கவனிப்போமாகில் எல்லாச்சீவர்களுடைய தியானதாரணை எப்படி நடைபெறுகின்றனவென்பது நன்கு புலனாகும் எனவே நான் என்ற அகங்காரத்தால் உடலைப்பற்றியும் எனதென்றமமகாரத்தால் உலகப்பொருள்களையும் கொள்ளாத உயிர்கள் எவ்வுலகத்தும் இல்லவே இல்லையென்பது திண்ணம். ஆயின் அவற்றைஞானமென்னலாமா அன்றி அஞ்ஞானமென்னலாமா அஞ்ஞானமென்றே சொல்லவேண்டும். அங்ஙனமாயின் ஸ்தம்பம் சிறுபூச்சி முதல் நான்முகன் இறுதியாக உள்ள எல்லாச்சீவர்களுடைய தியானம்எப்படியிருக்கிறது. அறிவுருவாயமெய்யுணர்வாம் கடவுளைப்பற்றி இருக்கின்றதெனச்சொல்லலாமா அன்றிக் கடவுளைமறந்த தியானமே நடைபெற்றுவருகின்றதெனச் சொல்லலாமாவெனக் கவனிப்பின் நான் அல்லாத உடலையும் உலகையும் யான் என தென்று அபிமானித்தழுந்தியிருக்கும் ஸ்மரணையே அதாவது தியானமே நடைபெற்று வருகின்றதென முடிவுபெறுகிறது.

அங்ஙனமாயின் "பிறவிப்பெரு" ங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடிசேராதார் (குறள்) என்பதனால் அவற்றையெவ்வாறு நீந்துவது. அஃதாவது நியதிசெய்வது என தீவிரமான சிந்தனைக்குகொண்டுவருகிறபொழுதுதான் சத்சாஸ்திரங்களையும் அதன் அர்த்தசாரங்களையும் ஞான சற்குருமார்களால் ஐயந்திரிபறத் திரவிசாரித்தரிய நேரும்

அவ்விசாரணையே இங்கு நியானமென்னும் சொல்லுக்குச் சாக்ஷாத்தான அர்த்தமாகமுடிவுபெறும். ஆகவே, முற்கூறியபேதகமே நான் நான் என்ற உணர்ச்சிபேதங்கள் ஜீவர்களுக்கு யாதினால் வந்ததெனின் அநாதிஅஞ்ஞான மூலகாரணத்தால் காரியப்பட்ட கர்மவிசித்திரியமேயாம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. கர்மமென்பதேதெனில் கர்மமென்பது புண்ணியகர்மமென்றும், பாபகர்மமென்றும் புண்ணியபாபசமநிறையாயுள்ள மிஸ்ரகர்மமென்றும் மூன்றுவகையாகக்கூறுநிற்கும். அவற்றுள்ளும், ஒவ்வொன்றிற்கும் உத்தமபலம் மத்திமபலம் கனிஷ்டபலமென மூன்றுவகையாகக் கூறப்படுகின்றன. அதேதெனில்:—

1. புண்ணியத்தில் உத்தமபுண்ணியபலம் யாதெனில்:- இரண்யகர்ப்பாதிசரீரபிராப்தியென்றும்,
2. புண்ணியத்தில் மத்திமபலமேதெனில்:- தேவேந்திராதி சரிரப்பிராப்தியென்றும்,
3. புண்ணியத்தில் கனிஷ்டபலமேதெனில்:- யக்ஷராக்ஷஸ கின்னரகிம்புருடபிசாசாதி சரீரப்பிராப்தியென்றும்,

பாபத்தில் உத்தமபலமாவது.

1. பிராணிகளுக்கு துக்கத்தையுண்டாக்குகின்ற தேள், பாம்பு, கொசுக்கு, மூட்டைபூச்சி, புலிகரடி முதலிய சரீரப்பிராப்தியென்றும்,
2. பாபத்தில்மத்திமபலமேதெனில்:- தென்னை மரம், மாமரம், பலாமரம், புளியமரம், எருமை, பருந்து முதலிய சரீரப்பிராப்தியென்றும்,
3. பாபகனிஷ்ட்டபலமேதெனில்:- பசு, யானை, குதிரை அரசு, துளசி, முதலிய சரீரப்பிராப்தியென்றும்.

பாபபுண்ணிய சமநிறையாயுள்ள மிஸ்ரத்தில் செய்யப்பட்ட உத்தம கர்மபலமாவது..

1. நிஷ்காம சத்கர்ம சத்பக்தியின் புண்ணிய பலத்தினால் சித்தசுத்திவந்து சித்தசுத்தி பூர்வகமாய் சாதன சதுஷ்

டயசம்பத்திவந்து அதன்பூர்வகமாய் சிரவண, மனன நிதித்யாசனமுண்டாகி, அச்சிரவண மனன, நிதித்தியாசன பூர்வகமாய் அபரோக்ஷ ஞானமடைந்து அவ்வபரோக்ஷ ஞானத்துவாரா ஜீவன்முத்திசுகத்தை பெறக்கூடியமானிட சரீரப்பிராப்தியென்றும்.

2. மிஸ்ரகர்ம மத்திமபலமேதெனில்:- சுய ஆசிரமத்திற்கு உசிதமான காமியகர்மயோக்கியமான மானிடசரீரப்பிராப்தியென்றும்.

3. மிஸ்ரகர்ம கனிஷ்டபலமேதெனில், சண்டாள, பாண்ட குஷ்ட, முதலிய பெருவியாதியுடைய சரீரப்பிராப்தி என்றும் கூறப்படுகின்றன.

ஆகவே மேற்சொன்ன, புண்ணிய, பாப, மிஸ்ர, கர்மங்கள் எதனுல் செய்யப்படுகின்றனவென விசாரிக்கின் மனம், வாக்கு, காயமென்னும் மூன்ருல் செய்யப்படுகிறது என்று ஏற்படும். ஆயின் மனதால் செய்யப்படும் புண்ணியம், பாபம், மிஸ்ரம், என மூவகையும் அப்படியே வாக்கால் மூவகையும், காயத்தால் மூவகையும் செய்யப்படுகின்றன. அவையாதெனில்:—

1. மனதால் எண்ணப்படும் புண்ணியச்செய்கையாவது யாதெனின் சகுணத்தியானசிந்தனை, நிற்குணத்தியான சிந்தனை, பரலோகத்தியான சிந்தனை, பிறருக்கு இதந் தேடும் சிந்தனை, பக்தி ஞானவைராக்கிய சிந்தனை முதலியனவாம்.

2, மனதினுல் எண்ணப்படும் பாபகர்மமாவது யாதெனில் சர்வதாவிஷயசிந்தனை, பிறருக்குத்துன்பம் விளைவிக்கும் சிந்தனை, சாஸ்திரங்களில் அவநம்பிக்கையான சிந்தனை, பாபபுண்ணியமில்லையென்னும் சிந்தனை, ஜீவவதை மிகுந்து, ஜீவதயையில்லாச்சிந்தனை முதலியனவாம்.

3. மனத்தினல் எண்ணப்படும், மிஸ்ரவெண்ணங்களே தெனின், சகுணத்தியானகாலங்களில் மனத்தின் அடி பாகத்திலிருந்து எழுகின்ற விஷயாதிசிந்தனே முதலிய வைகளாம்,

1. வாக்கினல் செய்கிற புண்ணியகர்மங்களாவன:- வேதாத்தியயனம், சாஸ்திரபாடம் காயத்திரி, அஷ்டாக்ஷரம், பஞ்சாக்ஷர ஜபங்கள், பகவந்நாமசங்கீர்த்தனங்கள், பரோபகாரவார்த்தைகள் முதலியனவாம்.

2. வாக்கினல், செய்கின்ற பாப, கர்மங்களாவன:- சர்வதாபெரியோர்களேயும் பிறரையும் அகாரணமாகத் தூஷித்தல், அசத்தியம் சொல்லுமுதலியவைகளாம்.

3. வாக்கினல் செய்கிற மிஸ்ரகர்மங்களாவன வேதாத்தியயன சாஸ்திரபடன ஜெபதபாதிகாலங்களில் லெள்கிக வார்த்தைகளேயே பேசுகிறது முதலியவைகளாம்.

1. காயத்தால் செய்கின்ற புண்ணியகர்மங்களாவன மூர்த்திதலதீர்த்தஸ்நானம்குருதேவதாதரிசனம் சாஷ்டாங்க, அஷ்டாங்க, நமஸ்கார அங்கப்பிரதக்ஷணமும், பிறரைவருத்தாமை முதலியனவுமாம்.

2. காயத்தால் செய்கிற பாபகர்மங்களாவன:- சர்வதா பிறரைவருத்துகிறது, பரஸ்த்ரீகளேக்கூடுகிறது, பரதிரவியங்களேத் திருடுகிறது, துஷ்டசகவாசமாய்த்திரிகிறது முதலியவைகளாம்.

3. காயத்தால் செய்கிர மிஸ்ரகர்மங்களாவன:- அடியார்கட்கு அன்னமிடும் நிமித்தம் சாதுக்களேத்தேடிப்பிடித்தல், பர திரவியத்தை அபகரித்துத் தண்ணீர்ப் பந்தல் வைத்தல், கோவில், குளம், மடம், முதலானது சட்டி வைத்தல், பிறருடைய பூமியைக்கிரகித்து ஆலயங்கட்கும் மடங்கட்கும் விடுகிறது முதலியவைகளாம்.

ஆக, இத்தியாதி கர்மவிசித்திரங்களும் அதற்கான சரீரப்பிராப்திகளும் எதனுல் வருகிறதென்று ஆராயின் இராக்கத்துவேஷாகாரமான புத்தியால் அஃதாவது காமக்குரோதாதிகளாலேயே நிகழப்படுகின்றன வாகும் ஆயின், அவை எவற்ருல் ஏற்படுகின்றதெனக் கவனிக்கின், அநுகூலப்பிரதிகூல வஸ்துக்களில் நாம் வைக்கும் பிரியாப்பிரியம் காரணமாகநிகழும் எவ்வாறெனில், விருப்புவெறுப்பேகாரணமாம். அவ்விருப்பு வெறுப்பு எதனுல் உண்டாகிறதென்னில் பிராந்தியால் தனக்கன்னியமாயுள்ள வஸ்துக்களின்பால் வைக்கப் பட்டபற்றேயாம். அதுவே அஞ்ஞானகாரியமான சத்தியபுத்தியாமென்பது முடிவுபெறும். ஒவ்வொரு ஜீவர்களும், ஆத்மாவாகும் தனனைவிடுத்து தனக்கன்னியமாய தேகாதி நாமரூப பிரபஞ்ச அநித்திய வஸ்துக்களில் பிரியாப்பிரியம், வைத்தகாரணத்தாலேயே அதனில் விருப்பும் வெறுப்பும்கொள்ளநேர்ந்தது. ஆனல் எங்கும் நிறைந்திருக்கும் கடவுளினும்பின்னப் படாத, சச்சிதானந்தவடிவமேயாய ஆத்மஸ்வரூபமாகும் தன்னை எவரும் வேண்டாமென்று வெறுக்கவோ வேண்டுமென்று விரும்பவோ கூடாததாயிருக்கிறது, எங்ஙனமெனில்:—

## கைவல்யம்.

புவியுமநுகூலமெனிலிட்டமாம் பகைசெயிற்
புதல்வனெனினும் வெறுப்பா
முலகிலிருவகையுமல்லாத புல்லாதியினுதாசின
மாமாதலான்
மலினமறுசின்மயன் பல்வகையுமிப்படி
மகிழ்ச்சியில் விருப்பமிகழா

னலகிலானந்தவடிவாகுமுன் சொரூபத்தை
யாராய்ந்து பார்மைந்தனே.

என்றும். "உன்னை நீயறிவாயாகிலுனக்கொரு கேடு மில்லை" யென்றுங்கூறியிருப்பதும், ஈண்டு கவனித்தற்பாலன. ஆகவே, நித்யானந்த வாழ்வைப் பெறவேண்டு மாயின், ஞானசற்குருக்களையடுத்து சத்சாஸ்திரார்த்தங்களை இடைவிடாது நன்கு விசாரம் செய்யப்படுவதே தியானமென்று இங்கு நிரூபிக்கப்பட்டது.

"உணர்வியலாமுயிரொன்றுமொழித்த
உடன்முதலனைத்தும் உயிரல்பொருளே"
(தத்வராயர்.)

என்றுரைக் கப்பட்டிருத்தலால், இதில் உணர் வியலா முயிரென்பது, அறிவிமயமாகி உயிரெனக் கொள்ளவேண்டியிருக்கிறது அஃதேதெனின், மரம், செடி, கொடி, புல் முதலியன சரீரத்தால் உணர்ச்சிமாத்திர மறியும், அவைகள் ஸ்பரிசமாத்திரமறிவதால் அவற்றை ஓரறிவுயிரெனவும் சரீரத்தால் ஸ்பரிச உணர்ச்சியை அறிவதோடு நாக்கால் உருசியையும் அறியும் புழு முதலிய ஜந்துக்களை ஈரறிவுயிரெனவும். சரீரத்தால் ஸ்பரிசத்தையும், நாவால் உருசியையும் அறிவதோடு மூக்கால்வாசனையையுமறியும் ஈ எறும்பாதி ஜெந்துக்களை மூவறிவுயிரெனவும், ஸ்பரிசம் உருசி, வாசனையோடும் கண்ணால் ரூபவிஷயங்களையும் தெரிந்துக்கொள்வனவாகியதும் பிவண்டாதி ஜந்துக்களை நாலறிவுயிரெனவும், ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தத்துடன், சப்தத்தையும் அறியும், வானமர், மக்கள், நரர், மிருகபக்ஷியாதிகள் ஐயறிவுயிரெனவும், சாஸ்திரங்கள் கூறுகின்றன. அங்கனம் கூறப்பட்டதும் மெய், வாய், கண், மூக்கு செவி, இதுகளில் ஒன்று முதலாகக் கீழ்க்கொண்டு மேலுணர்தல்பற்றி, ஓரறிவாதியாய் உயிர் ஐந்தாக வருணிக்கப்பட்டிருக்கின்

றது. அஃதேதனின் சப்த, ஸ்பரிஸ, ரூப, ரஸ கந்தங்களை உணர்தல்பற்றி, உயிர் ஐவகையெனவும், தோற்ற பேதத்தால் உயிர் எழுவகையெனவும், உபாதி பேதத்தாலும் குணபேதத்தாலும் ஒவ்வொரு தோற்ற உயிர் பற்பல பேதமெனக்கொண்டதேயன்றி வேறு காரணம் பற்றியன்றே? எந்தவுயிருக்கெந்த பிறவி சுதந்தரம்? இன்றே, உபாதிதோற்றத்தாலும், வினைக்கீடாகப் பிறவி மாறுவதாலும், மேல் கீழதாகவும், கீழ்மேலதாகவும், உயிராகின்றதன்றோ? உயிரிங்ஙனமாவதற்குக்காரணம் கடவுளிஷ்டமெனில் அவருக்கு பாரபக்ஷதோடம் வந்து சம்பவிக்கும். அங்ஙனமின்றி சுபாவமெனச் சொல்வோமெனின் அனாதி சிருஷ்டியில் எந்தெந்தவுயிர் எந்தெந்த தோற்றமாக உற்பத்தியாயினவோ அந்தந்த உயிர் அந்தந்த தோற்றமாகவே மாறாது ஒருபடித்தாகவே இருக்கவேண்டும்.

அங்ஙனமின்றாதலால் தோஷமே சம்பவிக்கும்; அஃதன்றி நிலையாது மாறுதலடைவதே சுபாவமெனின் முடிவின்றாம்; முடிவின்றாகவே, ஒவ்வொரு உயிரும் பிறவியால் மாறிமாறி நிலைபெறாது அலையுமன்றோ? அங்ஙனமாயின் ஒவ்வொருயிர்க்கும் பிறவிகள் அளவின்றெனக்குறிக்கின்றதே, மாறிமாறிப்பிறவியெய்தற்கு உயிர் எப்போதும் இருக்கவேண்டுமன்றோ? இங்ஙனமிருக்க, உயிர் முன்பின் இல்லாததெனக்கூறலாமா? கூறுதற்கு இடமின்று. மீண்டும் சுபாவமெனின் அவைமுற்றும் நிலைபெறு. குதற்கவாதமாய் வந்துமுடியும். எனவே வினையென்று கூறுவோமாகில், அதுவும் எதுவரையில் விருப்பு, வெறுப்பு, உள்ளளவும், அதுவும் எதுவரையில் பொருளல்லவற்றைப் பொருளாகக்கருதும் அறியாமையுள்ளவும். இதுவும் எதுவரையில் தன்னைத்தானறிந்து தானேதானாக விளங்குமளவும். அப்பால் கேள்விக்கும், சங்கைக்கும் இடமின்றி, மெய்நிலை

விளங்கப்பெறுவோமாதலால் கிருதகிருத்தியர்களாகிவிடு கின்றோம். ஆகவே ஜீவர்கள் இந்நிலைகளின் பேதாபேத மறியாததால், இவற்றுள் யாதானுமொன்றை அவாவிவினை புரியுமன்றோ? வினைபுரிதல் என்பது சங்கற்பித்தலே. அஃதாவது சிந்தித்தல் சங்கற்பம் தியானம் என்ற சொற்கள் ஒரு பொருள் குறித்தபலபெயராம். வினைபுரிந்தாலன்றோ அதன் பயன் தனக்குக்கிட்டும். கிட்டினலன்றோ, அனு பவித்துத்தீர்க்கநேரும், அங்ஙனமனுபவித்துத் தீர்ப்பதற்கு பிறவிவேண்டுமன்றோ? ஆயின் இது தியானங்காரணமாக நிகழ்கின்றனவாதலின், உற்பத்திநாசத்தோடுங்கூடிய எண் ணிறந்த உடற்பேதங்களை எடுத்துழலும் பந்தத்துக்கேனும் முத்திக்கேனும் அவரவர்தியானமே காரணமாகின்றதென. விளங்குகிறது எனவே, தானே சமஸ்தபோகமுமாகப் பரிணமித்து இருத்தலைதானென்று அறியாது, தனக்கு அயலாகக்கருதுமளவும் அதனைச்சுகிக்க, உயிர்கள் தாவு தலே தியானமாம். அத்தியானம் உடலைப்பற்றியே நிற்கு மாயின் கல்பாந்தம் பலகடந்தாலும் பந்தத்திற்கேதுவாகிய அவ்வவ்வுடலையே பெற்று உழலுமல்லாது நித்தியானந்த வாழ்வைப் பெறுவதின்றும். எனவே சத்சங்கத்தில் ஈடு பட்டு ஞானசிரியரையடைந்து ஐபந்திரிபறத்திரவிசாரித் தறிகின்ற இறுதியில் சமஸ்தபோகமும் தனது நிஜசொரூ பத்தை அறியாதவறியாமை காரணத்தால் தேகாதிநாம ரூப பிரபஞ்சவஸ்துக்களாய்ப் பொய்யாகப் பரிணமித்துத் தோன்றுகின்றதெனத் தேர்ந்தவர்கள் மீண்டும் அயல்என நாட்டங்கொள்வரோ? ஆயின் தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டறியமுயற்சிப்பரன்றோ? இங்ஙன மாயதொடர்பவங் கெடவேண்டுமாயின் நித்தியசித்தமான தனது எதார்த்தவடிவத்தைப்பற்றிய விசாரணையையே செய்யவேண்டுமென்பது முடிவுபெறும். அதனையே இங்கு

தியானமென்னும் சொல்லுக்குப் பொருளாய் நிரூபிக்கப் பட்டது. ஆகவே மனமொழிமெய்கள் ஒன்றுபட்டமனத் தால் சற்குருமுகமாய் விசாரித்தறியும் விசாரஞானமே இன்றியமையாததாய் இருக்கிறது. அவ்விசாரஞானமே தியானம், யோகம், ஜபம், தபம், பக்தி, வைராக்கியம், சிர வணம், மனனம், நிதித்தியானம், சவிகற்ப சமாதி, நிர் விகற்பசமாதிமுதலியவைகளாய் சித்திக்கப்பெற்று இறுதி யில் கடவுள் சாக்ஷாத்கார்த்தையும், அடையச்செய்துவிடு கின்றது. ஆதலால் விசாரணையென்னும் தியானமே ஆனந் தமேவடிவான ஆத்மாவாகும் தன்னை வெளிப்படுத்தும் என்பது உண்மை.

## பிரமாணம்.

“பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும்
மருளானு மாணுப்பிறப்பு” (குறள்)

என்றபடி பொருளைப்பொருளாக்காணுதளவும் அவா நாசத்துக்கிடமின்று. இடமின்றுமளவும் போக, தாகம் நசியாது. நசியாவளவும், அதனையனுபவிக்கயாதானும் வினைபுரியவேநேரும் நேருமளவும்பிறவியகலாது அகலா ததுபற்றியே இங்ஙனமாய முறைகள் கூறப்பட்டது. அன்றியும் இப்போதே பற்பலபிறவிபேதமும், தேகபேத மும், கோரிக்கைபேதமும், அடங்காத அவாபேதமும், சங் கற்பபேதமும் முயற்சிபேதமுமாய் உயிர்களிருக்க இதனி னும் பிரத்தியக்ஷம் எதற்கு? “ஞானம் பிரதானம் தபஹா” எனச்சுருதியும் “ஞானமலது கதிகூடுமோ” வெனத் தாயு மானவரும், ஞானப்பொருள் நிறைந்த மறையமுதம்பொழி கின்ற, மலர்வாயோய்புன்மையேன்றன்மருள் நிறைந்த மனக்கருங்சற் பாறையுமுட்கசிந்துருக்கும் வடிவத்தோயே’

எனவடலூர் வள்ளல்பெருமான் கூறியிருப்பதும் போதுமான சான்ருகும்.

### பிரமாணம்.

பிரம்மரூபத்தைத் தியானித்தபேர்களும்
பிரம்மமாகுவரென்ருல்
கரசரீரமாங்குரவனே விசாரமேன்
ஞானமேனென்றுதே
பரமபாவனே பரோக்ஷமாம்பின்பந்த
பரோக்ஷமேயபரோக்ஷமாம்
திரவிசாரமாஞானமே முத்தியார்
தீர்வையீதறிவாயே. (கைவல்யம்)

---

உ

## அத்வைத விசிஷ்டாத்வைதங்களின் கருத்து.



### அத்வைதமென்பது.

உலகம் சத்தியமன்று, அசத்தியம். காணப்படுகின்ற இடப்பொருளாகிய உலகமும் அதிலுள்ள பொருள்களும் அழியுந்தன்மையவென்பது எல்லாமதத்தினர்க்கும் உடன்பாடே. அத்வைதபக்ஷத்தில், உலகம் அசத்தியம் மென்பதின் கருத்துயாதென்ருல், நாம் உண்பதும், உடுப்பதும், நடப்பதும், பேசுவதுமாகிய செய்கைகளெல்லாம் பரமார்த்தகசையில் மித்தை (பொய்) விவகாரதசையில் உண்மை (சத்தியம்) நிர்குணவஸ்துவான ஆத்மா ஒன்றேயன்றி

இரண்டன்று. சுத்தப்பிரம்மம், மாயாசம்பந்தத்தாலேயே ஈஸ்வரன் என்றும், அவித்யாசம்பந்தத்தாலே ஜீவனென்றும், விவகரிக்கப்படுகின்றது, சம்சரிக்கிறதற்கு காரணம் யாதென்றால், அவித்தையேயன்றி வேறில்லை. மோக்ஷமென்பது தானேபிரம்மமென்று உணரும் ஞானமே. இதற்கு முக்கியசாதனம் ஞானசற்குருவின்பால் சிரவணம் செய்யப்படும் விசாரக்ஞானமேயாம்.

## விசிஷ்டாத்வைதமென்பது.

உலகம் சத்தியம். அதாவது,, நாம் உண்பது முதலிய செய்கைகளெல்லாம் உண்மையே. ஈசுவரன் சர்வக்ஞன். ஈசுவரனைப்போன்று ஜீவனும் நித்தியனே. ஈசுவரன், ஜீவர்களுக்கும், ஜடப்பிரபஞ்சங்களுக்கும் அந்தர்யாமியாகவும், சரீரியாகவும், நியமகனாகவும், சேஷியாகவும் இருக்கின்றான். ஜீவர்கள் ஈசுவரனுடைய அம்சர்களாகவும், சரீரங்களாகவும் சேஷமாகவு மிருக்கின்றார்கள். ஜீவர்கள் சம்சரிக்கிறதற்குக்காரணம் அனாதியான கருமமேயன்றி வேறில்லை. மோக்ஷமாவது: நித்தியானந்தமுடைய, அப்ராகிருதமான ஸ்ரீவைகுண்டத்தில் பிராகிருதாகிதமான சரீரமுடைய பரப்பிரம்மத்தின் பரமசாம்யமப்பெற்று நித்தியானந்தர்களாயிருப்பதாகும். இதற்கு முக்கியசாதனம் பகவத்பக்தியேயாம்.



# இராமாயண ஆந்தரார்த்தமென்னும் ஞானராமாயணம்.



மோக்ஷமென்னும் அயோத்தியில் பிரம்மமென்னும் தசரதன் ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தியென்னும் மூன்றுமனைவியருடன் கூடிவாழ்கையில், ஞானசத்தியென்னும் கௌசலையின், கருப்பத்தில் ஆத்மாவென்னும், ஸ்ரீராமன் பிறந்து, அவ்வியக்தமென்னும் பால்யத்தால்தன்னை மறந்து, அஞ்ஞானபயனுன ஜீவனேதானுகித்தேகேந்திரியாதிகளுக்குக்கோனுகிச்சிரவணமென்னும், வசிஷ்டரையடைந்து, மனனமென்னும், விஸ்வாமித்திரரைத்தொடர்ந்து வைராக்கியமென்னும், இலக்குவனுடன் நடந்து, பஞ்சமாபாதகமென்னும், பர்வதங்களைக்கடந்து; காடு, மலை, வனம், வனந்திரங்களைக்கடந்து, ஆத்மாராமனென்னும் பரமேட்டி, ஞானமென்னும், பாணத்தைத்தீட்டி, ஆவரணமென்னுந்தாடகையைமாட்டி, அடியோடிறந்து போகவாட்டி, இச்சையென்னும் மாரீசனுக்குப் பயங்காட்டி, அவனை என்னெதிரில் வந்தால் சாவாய் என்றோட்டி, விபசாரமென்னும் பாறையை மிதித்து, ஆசாரமென்னும் அகலியைத்துதித்து, ஏகாந்தமென்னும்மிதுலைநகர்க்கேகி, சாந்தமென்னும் ஜனகரைச்சார்ந்து, பொறுமையென்னுங்கார்முகத்தையொடித்து, ஆனந்தமென்னுஞ் ஜானகியின் கைபிடித்து, மதமென்னும், பரசுராமனை எதிர்த்து, என்றும் மதமெழாமல் விதிர்த்து, மோட்சமென்னும் அயோத்தியிற்புகுந்து, ஜீவன் நானல்லவென்று உவந்து, பிரம்மமென்னுந்தசரதனைக்கூட, ஜீவத்வமறல் என்னும் மகுடாபிஷே

கம் நிறைவேருவன்னம் நாடகக்கிரியையென்னும் கைகையினுனுடைய சலனமென்னும் ஏவல்வந்தடைய பிரம்மமென்னுந்தசரதனைப்பிரிந்து, மோட்சமென்னும் அயோத்தியைத்துறந்து, வைராக்கியமென்னும், இலக்குவனுடனும் ஆனந்தமென்னும் வைதேகியுடனும், சித்தமென்னுஞ் சரயூநதியைத்தாண்டி புத்தியென்னுங்குகன்றனைமேவி விக்ஷேபமென்னும் வனத்தினுட்சென்று, தபமென்னுஞ் சித்திரகூடத்தில் நின்று, அகங்காரமென்னும் விராதனைக் கொன்று, மனமென்னுங்காகாசுரனது சங்கல்பமென்னுங் கண்ணைக்கெடுத்து நிர்விகற்பமென்னுங்கண்ணைக்கொடுத்து வீரமென்னும் அகஸ்தியரைக்கண்டு, தீரமென்னும் ஸ்திரம் பெற்றுக்கொண்டு, காயமென்னுஞ் சூர்ப்பனகையைத் தண்டித்து, ஆகாமியமென்னும்கரதூஷணரைக்கண்டித்து இச்சையென்னும், மாரீசனலே ஆனந்தமென்னும். சீதையைவிட்டுப் பிரிந்ததால், இராசதமென்னும், இராவணன் வந்தடுத்து, ஆனந்தமென்னுஞ் சீதையையெடுத்து, இன்பமென்னும் வைதேகியையுருக்கும், துன்பமென்னும் இலங்கையிலிருக்கும், அசுபவாசனையென்னும் இராக்கதர் மொய்க்க, எல்லையென்னும் அசோகவனத்தில்வைக்க, ஆத்மாவென்னும் ஸ்ரீராமன் கடுகி, இச்சையென்னும் மாரீசனைமுடுகி, நிராசையென்னும் பூமியின் மேற்சாய்த்து, என்றைக்குந்தன்முன்வாராமல் மாய்த்து; ஆனந்தமென்னும் மைதுலியிருந்த இடம்வந்துநோக்கி, இல்லாமையால் ஆத்மாராமன்நொந்து, வைராக்கியமென்னும் இலக்குவனுடன் அயர்ந்து விக்ஷேபமென்னுங்கானகத்திலலைந்து, சிந்தையென்னுங்கவந்தனைக்கொன்று, சந்தோஷமென்னும் சபரிபாற்சென்று, நிதித்யாசனமென்னும் அநுமானைக்கூடி, ஆனந்தமென்னுஞ்சீதையைப்பாடி, ஜனனமென்னும் சப்ததருக்களைக்கொய்து, பயமென்னும் வாலிமேலம்பெய்து, அபயமென்னும் சுக்ரீவனைக்காத்து, சுபவாசனை

யென்னும் வானரங்களைச்சேர்த்து, நிதித்யாசனமென்னும் அனுமானைத்தூண்டி, மோகமென்னுஞ் சமுத்திரத்தைத் தாண்டி, லோபமென்னும் இலங்கணியைத்தொலைத்து, அசுபவாசனையென்னுமிராக்கதரைக்கலைத்து, ஆனந்தமென்னுஞ் சீதையைக்கண்டு உல்லாசமென்னும் அனுபூதிமேற்கொண்டு, எண்ணமென்னும் அசோகவனத்தையழித்து. அஞ்ஞானமென்னும் மாலியவானைக்கிழித்து, சந்தேகமென்னும் அட்சயனைமிதித்து, விபரீதமென்னுமிந்திரஜித்தனைப்பழித்து, மயக்கமென்னும் பாசத்தைவெதிர்த்து, இராசதமென்னும் இராவணனையெதிர்த்து, மௌனமென்னும் அக்கினியை பெருக்கி துன்பமென்னும் இலங்கையைக்கருக்கி, மோகமென்னும் வாரிதியைக்கிட்டி திடமென்னுமணையைக்கட்டிச் சாத்வீகமென்னும் விபீஷணனைச்சுட்டி, தாமஸமென்னுங் கும்பகர்ணனைவெட்டி, இராசதமென்னும் இராவணனை அகட்டி விபரீதமென்னுமிந்திரஜித்தனைமுட்டி, மயக்கமென்னும்பாசத்தால் மயங்கி, வைராக்கியமென்னும் லக்ஷ்மணனுடனியங்கி, நிதித்தியாசனமென்னும் அனுமார்களிக்க, நிஷ்டையென்னுஞ்சஞ்சீவியையளிக்க வைராக்யமென்னும் லக்ஷ்மணர்கதிக்க, விபரீதமென்னு மிந்திரஜித்தனைச்சிதைக்க, சஞ்சிதமென்னு மூலபலமெதிர்க்க, தீரமென்னும் மோகனாஸ்திரம்வதைக்க, அசுபவாஸனையென்னும் இராக்கதர் முடுக்க சுபவாசனையென்னும்வானரங்கள்கெடுக்க, ஆத்மாவென்னும்ஸ்ரீராமன் கடுத்துக்கெம்பீரமென்னுங் கோதண்டமெடுத்து, இராசதமென்னு மிராவணனையடுத்து, ஞானமென்னும் பாணத்தைத்தொடுத்து, நானென்னுங்கலசத்தையுடைத்துத்தசேந்திரியங்களென்னுந்தசமஸ்தகங்களையுடைத்து, ஆனந்தமென்னுஞ்சீதையைக்கண்டு, மௌனக்கினியிற்குளியென்று விண்டு, பிரம்மமென்னுந்தசரதனைநாடி, ஆனந்தமென்னுஞ்

சிதையைக்கூடி மோக்ஷமென்னுமயோத்தியிற்புகுந்து, ஜீவத்வமறல் என்னும் மகுடாபிஷேகம் புனைந்து, பிரம்மமென்னுந்தசரதனே தானுகி மோக்ஷமென்னுமயோத்திக்கு கோனுகி கேவலகைவல்ய பிரம்மானந்த சொரூப சாக்ஷாத்காரமாயிருக்கும் நிலையே ஜெனனமரண ஜீவரோக நிவாரணத்துக்காய ஒளஷதமாகும் ஆந்தரார்த்தத்தை உள்வைத்து பகிரங்கத்தே, கதாரூபமாயும், குழந்தைகளுக்குத்தாயானவள் மருந்தின்மேல் சர்க்கரைக்கவசமிட்டுக் கொடுப்பதுபோல் வேதமாதாவும் அதனையனுசரித்தமகான்களும் நம்மைக்கடைத்தேறுமாறு செய்துகொடுத்த இதிகாச புராணங்களின் தாற்பரியார்த்தமிதுவாம்.

தினமுமன்னுகர் பிள்ளைநோய்க்
கிரங்கியேதீம்பண்ட மெதிர்காட்டிக்
கனமருந்துகளொளித்து வைத்தமைக்
கின்ற கருணையாந்தாய்போல
மனையறங்கள் செய்பாகங்கள் செய்
நன்றென்று மலர்ந்தவாசகஞ்சொல்லி
நினைவுவேறு காண்சுவர்க்க காமிகளந்த
நிர்ணயந்தெரியாரே. (கைவல்ய நவநீதம்.)

---



# ஜீவகாருண்யவொழுக்கம்.



ஜீவகாருண்ய ஒழுக்கமென்பது. அஹிம்ஸாபரமோ தர்மஎன்பதேயாம். இதன் பொருள் அனந்தவிதமாயிக்கு மாயினும், முக்கியமாய் இங்குகவனிக்கத்தகுந்தது யாதெனின்:—

எவரும் பிரியப்படற்கியைந்தது தனம்; அவற்றினும்; சிறந்தது மகன்; அவற்றினும் சிறந்தது தனது தேகம்; அவற்றினும் சிறந்தது இந்திரிய பிராணகரணமாம். அவற்றினும் சிறந்தது உயிர்; அவ்வுயிராகியது ஆன்மா; அவ்வாத்மா பரமாத்மாவினும் பின்னப் படாததாய், எங்குமாய், எப்பொழுதும் எந்நிலையினும் தனது எதார்த்தஸ்வரூபத்தினின்றுந் தானகலாது சச்சி தானந்தவடிவாயிருக்கிறது என்னும் அர்த்தத்தைத்தெரி விப்பதே ஆத்மாவின் ஸ்வதர்மத்தைக் காட்டாநிற்கின்றது. இதுவே, அறம் அல்லது, தர்மம் என்னும் சொல்லுக்குப் பொருளாம். அதுவே சர்வதுக்கநிவர்த்திவடிவமென்பதை யறிவுறுத்த அஹிம்ஸாவென்றும், அதுவே மேலாயமெய்ப் பொருள் விளக்கமென்றும் வேதாகம புராணங்கள் கூறு நின்றன. ஆனால் ஹிம்சைஎன்பதற்கு என்னசித்திக்கிறது. துன்பம் அல்லது, துக்கம் என்பதே சித்திக்கும். அங்ஙன மாயின் தனது எதார்த்தஸ்வரூபத்தை யறியாததும், அய தார்த்தவடிவத்தைத்தானெனக்கொண்ட பேதகத்தாலுமே தனக்கு துக்காரோபம் சம்பாவிதமாகி இம்சைக்கு உட்பட் டதுபோல தோற்றுகிறது. ஆகவே, பொய்யை மெய்யென் றறிவதால் துக்கானுபவமான ஹிம்சைசித்தித்தலும், மெய் யைமெய்யென்றறிவதால் துக்கஅபாவமே என்றும் உள

தென்றும், ஆனால் முன்னமே சித்தித்துள்ள பிராப்தி பிராப்பியநிரதிசயானந்த வாழ்வு உருவன்தானென்றும்முடிவு பெறும். இம்முடிபே அஹிம்ஸாபரமோதர்ம வென்னும் வாக்கியத்திற்கு நேரான அர்த்தமாகும். இதையே வேறுவாக்கியத்தால் ஜீவகாருண்யமெனச்சாஸ்திரங்கள் கூறாநிற்கும்; அவையாதெனில், ஜீவனென்கின்ற சொல்லும் பொருளுமாய்ச்செறிந்தது ஆன்மாவே, யென்ற வாக்கியத்தின்படி, மாறுபாடு அடையும் தேகாதிநாமரூபப்பிரபஞ்ச வஸ்துக்களையும் அபிமானித்து: நன்மைதீமைகளை நன்கு விசாரித்தரியாது பாபபுண்ணியகிருத்தியங்களையே மேன்மேலும் இயற்றி அதன்பலனான சுகதுக்கங்களை அனுபவிக்குங்கால் துன்பமேமேலிட அதாவது தாப மேலீட்டால் தபிக்கும் தாபமே ஜீவசப்தத்துக்குப் பொருளாய் முடிவுறும் அவ்வசரத்தில், காருண்யமே வடிவமாய்ச்சர்வாந்தர்யாமியாயுள்ள பகவான் மானிட உருக்கொண்டு சற்குருவாய் வந்து மாறுபாடில்லாததும் ஏகரசமாய் என்றுமுள தான என்னினும் பின்னப்படாததேகியாம், சச்சிதானந்த வடிவப்பொருள் நீயேயென்றுணர்த்தவுணர்ந்து அதுவாகவே இருக்குமவசரத்தையே ஜீவகாருண்யமென்னும் வாக்கியத்தின் அர்த்தமாகக்கொள்வர். இதுவே வடலூர் இராமலிங்கஸ்வாமிகள் ஜீவகாருண்யவொழுக்கத்தில் முதலாவதாகக்காணப்பட்டிருக்கும் முக்கியதாற்பரியமாம்.

மற்றுமோர்வகையாகக் கவனிக்கின் காருண்யமென்ற சப்தார்த்தம், காருண்யமென்பதனால், இரக்கமென்பதனையுணர்த்தும்; இரக்கமென்பது, உபகரித்தல் என்பதையுணர்த்தும், அவ்வுபகாரசக்தி சம்பூர்ணமாயிருப்பதென்பது எல்லாம்வல்ல ஈஸ்வரனிடமேவுள்ளது. அஃதெங்ஙனமெனில், யாதோர் பிரதிப்பிரயோஜனத்தையும் ஜீவர்களிடம் எதிர்பாராது தான் உபகரித்திருக்கும் தனுகரண

புவனபோகபாக்கியங்களை நாம் என்னதென்றபிமானித்து உலோபியாயிருத்தல் என்னவென்றுகூறுவது, அன்றியும் "எல்லாமுடையான் என்னையுமுடையான்" என்றபடி அப் பகவானது கிருபாநிதித்துவமான பேருபகாரத்தை நன்கு விசாரித்து எல்லாம் ஈஸ்வரார்ப்பணமென்ற புத்தியோடாவது, நிஷ்காம்யமாய் அவரவர்கள் சக்தியானுசாரமாயேனும் உபகரித்தலையே ஜீவகாருண்ய மெனவுங்கூறலாம். இதுமத்யமபக்ஷம், இதுவும் சாத்தியமில்லாதவர்கள் தன்னலமாத்திரத்தையே உன்னி, அதனால் ராகத்வேஷாதிகள் விருத்தியாக அதற்குத்தான் அடிமையாகிவிடாமலும், பிறருக்கு உபகாரம் செய்யத்தயைதாக்ஷண்யம், ஈவுஇரக்கம்; பச்சாத்தாபம், பொருமை முதலிய குணங்கள் அமையப் பெருவிட்டாலும் கனவிலும் எச்சீவர்களிடத்தும், துவேஷம் பாராட்டாமலும் அபகாரத்தைச்செய்ய ஒருபோதும் எண்ணம் எழாதிருக்க ஒருவன் தேர்ச்சிபெறுவானுயின் இக்கலியில் அதுவே பெருஞ்சீவகாருண்யமென்றுங்கூறலாம். இதனைக்கனிஷ்டபக்ஷமென்று பெரியோர் கூறுவர்.

ஆகஜீவகாருண்யமென்பது ஜீவனை உத்தரிக்கசெய்வதேயாம். அஃதாவது தேகாபிமானங்கழல யானைமுதல் எறும்பு ஈராயுள்ள எல்லாச்சரீரங்களிடத்தும் உள்ள ஆத்மாவை ஏகமாய், சமரசமாய் ஞானக்கண்ணுல் பார்க்க எவருக்கு அருட்கிருபைகிட்டுகிறதோ, அன்றுதான் அவருக்கு சிவத்துவம் கழலுமென்பதை அறிவுறுத்துகின்றது. அன்றே அவன்சத்தை அழியாப்பொருளை அறியப்பட்டவனுகிருனென்பதைக்குறிக்கவே அதனைச்சன்மார்க்கமென்றும், ஞானமார்க்கமென்றும் சகலசாஸ்திரங்களும், முறையிடுகின்றன. சான்றோரும் முறையிடுகின்றனர். இதுவே தன்னிலையினின்றும் தானகலாது நிற்றலென்பதான புண்ணியநெறியாம். அதுவே தருமம் என்றும், அறநிலை விளக்கமென்றும் கூறுவதுண்டு.

மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்திற்
கண்விழித்துவயங்கூடப் பெண்
உருவாணையுருவாக்கி யிறந்தவரை
யெழுப்புகின்ற வுறுவனேனும்
கருவாணையுறவிரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்தனேயெங்
குருவாணையெமது சிவக்கொழுந்தாணை
ஞானியெனக்கூறொணாதே.

(வடலூர் இராமலிங்கஸ்வாமிகள்)

—

உ

## மார்க்கண்டேயர் பக்தி.



"குறியொன்றுமில்லாத கூத்தன்றன் கூத்தனெனக் கருளுவல்லமருளியவாறூர் பெறுவாரத்சோவே" என்ற மணிவாசகப்பெருமான் வாக்கின்படிக்கும்.

"உருவன்றருவன்றுளதன்றிலதன்றிருளன்றொளியன்றென நின்றதுவே," என அருணகிரியாரும் "ஆணல்லன் பெண்ணல்லனல்லா அலியுமல்லன் காணலுமாகான் உளனல்லனில்லனல்லனுமா" மென்று' நம்மாழ்வாரும் அருளியபடிக்கு நான் நீ யென்னும் துவைதமற்ற அத்வைதசித்தமான ஈஸ்வரவடிவத்தில், நான் நீ என்னும் பேதம் கற்பிப்பதற்கில்லாமலிருக்கிறது. ஏனெனில், "பார்க்குமிடமெங்குமொருநீக்க மறநிறைகின்ற பரிபூரணாாயும்" ஆனந்தமேவடிவாயிருத்தலாலும் என்க. எனவே இந்நிலையில் நின்றும் மார்க்கண்டேயரின் சம்பவங்களைக் கவனிப்போமாயின் உண்மை இன்னதென்பது நன்கு விளங்கும்.

நான் ஈஸ்வர பக்தனென்ற அகந்தையானது, ஈசன் இங்குளான் யென்று ஓர் குறிப்பைப் பற்றாகப்பற்றிக் கொள்ள ஏற்பட்டதன் காரணமே அங்கிலே என்பதனைத் தழுவுதலோடும், எங்கும் எல்லாமாயிருக்கும் சம்பூரண பக்திநிலையெய்தப்பெறவில்லை யென்பதை வெளிப்படுத்தா நின்றது. மார்க்கண்டர், நான் ஈசுவர பக்தன் எமதர்மா நீ என்னை என்செய்யக்கூடும், என்னும் செய்கையினுல், எமதர்மனும் நான் ஈஸ்வர பணியாளன், நீ ஈசுவரன் இங்குளன் என்றபின்னக்கொள்கையைக் கொண்டதால், எங்குமாயுள்ள ஈஸ்வரனென்பதுவும், விளங்கப்பெருததால் நீ செல்லுமிடந்தோறும் விடாது தொடர்ந்துவந்து உன்னைக் கைப்பற்றுவேன் என்றுன், இதனுல் வெளிப்படுகிறதென்ன வென்ருல் நான், நீ யென்ற அகந்தையாம் (அக்ஞானத் தாலாய) பேதப்பார்வை யருதவரையில் எத்தேவராயினும் இடர்ப்பட்டேதீரவேண்டும் என்பதை ஜீவர்களுக்கறிவுறுத் தவே, ஈஸ்வரன் மார்க்கண்டனுக்கு நான் என்ற பற்றுக் கோட்டால் நீ என்னைப் பக்திபண்ணியது வீண். ஏனென்பையேல் இந்த நான் என்ற அகந்தயே மூலமான ஆசை அவ்வாசையே பாசமாம். பாசம் யென்பது கயிரும், அக்கயிற்ருல் கட்டுப்பட்டவனே, பந்தத்தின்வயப்பட்டவனும், ஆகையால் அந்த நான் என்பதை விடு அதனை விடாத வரையில், நின்னுல் எனக்கும் பழியேற்படும் என்பதனை யறிவுறுத்தவே, தன்னையும் சேர்த்து இயமன் பாசக்கயிற்றை வீசும் வரையில் எதிர்பார்த்திருந்தார் என்பதாம்.

இங்ஙனம் ஈசன் வேறு இயமன் வேறு என்று பிரித்ததற்குக் காரணம், இடையிலுள்ள நான் என்ற பிடிப்பருததேயாம். ஆனதால் அங்ஙனம் பிடிப்பற நேர்ந்தபிறகே 'பிரகாசம் வந்தவிடத்து இருள் நில்லாததுபோல' நான் நீ யென்ற பேதப்பார்வை யொழிதலென்னும் எமசங்காரம்

ஏற்பட்டு எங்கும் தானே தானுயிருக்கும் தன்ளில் தானுக் கிக்கொண்டாரென்பதே புராணத்திற்கூறிய உண்மைப் பொருளாம், ஆகவே அகங்கார கிரந்தியை வைத்துக் கொண்டு என்ன பக்தி பண்ணிஞலும் ஈசனருள் கிட்டா தென்பது தாத்பரியமாம். இதேபோன்று பாரதத்தில் துரோபதையின் மானசம்ரக்ஷணம் எப்போதுண்டாயிற் றென்பதைக் கவனிப்பினும் நன்கு விளங்கும்.

——

௨

## ஈசுவரதியானபஜனத்தின் முறை.

பெரும்பாலோர் ஈசுவரனை மனத்தால் தியானிப்பதி லும், வாக்கால் அவரது நாமத்தைச் சொல்லித்துதிப்பதி லும் அபராதத்துக்காளாகின்றனர். அவ்வபராதமாவது யாதென்பதை இங்கு சற்றேவிசாரிக்கவேண்டியது அவசிய மாகும்.

சாஸ்திரங்களில் பத்து அபராதங்கள் கூறப்பட்டிருக் கின்றன. அவையாவன:—

1. சத்புருஷர்களை நிந்தித்தல்.

2. அசத்புருஷர்களிடத்தில் ஈசுவரநாமத்தின் மகி மையைச்சொல்லுதல்.

3. சிவவிஷ்ணுஎன்பவர்களிடத்தில் பேதபுத்திகொள் ளுதல்.

4 சுருதிவாக்கியங்களைக்கேட்கச் சிரத்தை யின் றி இருத்தல்.

5. சாஸ்திரவாக்கியங்களில் அசிரத்தைகொள்ளுதல்.

6. குருவாக்கியத்தில் சிரத்தாபத்தியில்லாதிருத்தல்.

7. ஏகமான மெய்ப்பொருள் ஒன்றையே அனந்த மூர்த்தியாய்க்கொண்டு அனந்தநாமங்களால் துதிக்கப்படுகின்றது என்ற அபேதபுத்தியில்லாமல் ஹடத்தால் பேத புத்திகொண்டு அனுஷ்டித்தல்.

8. பலபாவங்களை நாசஞ்செய்கின்ற நாமத்தைத நாம் துதிசெய்கிறோமென்னும் அகங்கையால், பூததையை முதலிய ஜீவகாருண்ய புத்தியில்லாமல் நிஷித்த (தள்ளத்தக்க) கர்மங்களைச்செய்தல்.

9. பெரும் புண்ணியத்தையுண்டுபண்ணுகின்ற ஈஸ்வரநாமத்தை நாம் துதி செய்து பஜிக்கின்றோம் என்னும் மமதையால் வருணசிரம தர்மங்களுக்குசிதமான சத்கர்மங்களை விட்டுவிடுதல்.

10. பிரதிப்பிரயோசனம், புகழ் இவற்றைக்கருதிக்கடவுள் நாமாவைச்சொல்லுதல். என்பனவாகும் இப்பத்தும் சில விஷ்ணுதியான துதியில் நிகழும், நாமாபராதங்களாம்.

ஆகையால், ஓர்பக்தரானவர் "இராமா இராமா வென்று இரவு பகல் இடைவிடாது துதிசெய்யினும் இப்பத்து தோஷங்களுமின்றித் தியான, துதிசெய்யாவிடில் அவர் ஈசுவரவபராதியேயாகின்றார். ஆயின் எவரொருவர் மேற்சொன்ன பத்துவித தோஷமுமின்றி துதி செய்கின்றாரோ அவர்களே, "ஞானசபைத்தலைவனுக்கு நல்லபிள்ளை நானே" என்ற அருள்வாக்கினர் வாக்கியத்திற்கு இலக்காகின்றார்கள்.

சத்தியம் பேசிமெய்த் தருமமாற்றிடல்
நித்தியமேன் கடனு மெனப்புரிவதே.

==

உ

# கர்ம, பக்தி, ஞான சாரசங்கரகம்.



எம்மதமும் சம்மதமாய்க்கொள்வதும் அனாதியாயுள்ளதுமான இந்துமதச்சுருதிகள் கூறும்: கர்ம பக்தி ஞானமெனும் மூன்றில் ஒன்றிற் கூறுவதுபோல மற்றொன்றில் கூறுகிறதில்லையெனச்சிலருக்கு சங்கையேற்படுகிறது. அச்சங்கையால், ஒருசிலர் இந்துமத சாத்திரங்களின் நுட்பங்களை நன்கு விசாரித்துணராமல் விபரீத அர்த்தங்களைக் கொண்டு துன்புறுகின்றனர், அதன் காரணத்தைச் சிறிதுகவனிப்போம். ஒவ்வொரு குடும்பங்களிலும் தாய் தந்தையருக்கு, முறையே ஒன்று, பத்து, இருபதுவயதுக் குழந்தைகள் மூன்றுஇருக்குமானால் அக்குழந்தைகளுக்கு எவ்வெவ்வாறு பசிநிவர்த்திசெய்வித்தும், எவ்வெவ்வாறு வார்த்தைகளைக்கூறியும் அவர்களை வளர்த்துவருகின்றார்கள் என்பதைச்சற்று ஊன்றிக்கவனிப்போமாயின் தாய்தந்தையரிடம் பிள்ளைகளின் வயதிற்கேற்ப மூவகைப்பட்ட சட்ட திட்டங்கள் இருந்தேதீரவேண்டுமென்பது நன்கு விளங்கும். அதுபோலவே வேதமாதாவும், ஜீவர்களின் பக்குவாபக்குவத்தை அறிந்து மூவகையாகப் பிரித்து அச்சீவர்களை கர்ம, பக்தி ஞானமென்னும் முன்றனாலும் ஈடேற்றும் எனவேதத்தில் விள்ளப்பட்டிருப்பதேயன்றி வேறல்ல. அவை கீழ்வருமாறுகாண்க.

ஜீவர்களின் மனத்தில் மூன்று தோஷங்களுண்டு ஒன்று அழுக்கோடுகூடிய கழிவுஜலம்போன்றதன்மை. (இதனைசாஸ்த்திரங்களில் மலதோஷமென்பர்) இரண்டு அற்ப அழுக்கோடுங்கூடிய ஆற்று ஜலம் போன்று சஞ்ச

லத்தன்மையோடுகூடிய தன்மை. இதனை சாஸ்திரங்களில் விக்ஷேபதோஷமென்பர். மூன்று சுத்தமானவூற்று ஜலம் போல் (கண்ணாடியைப்போல்) உள்ள தன்மை. (இதனை சாஸ்த்திரங்களில் ஆவறணதோஷமென்பர்.) "மக்களின் தூலதேகத்தில் வாதம், பித்தம், சிலேட்டுமம் என்றும் மூன்று தோஷங்கள் உள்ளன. அவற்றை நிவர்த்திக்க, அகஸ்தியர், தன்வந்திரி முதலியோர் ஆயுர்வேதத்தைச் செய்திருக்கின்றனர்.". அதுபோல, அந்தக்கரணத்திலும் மலம், விக்ஷேபம், அஞ்ஞானம் என்னும் மூன்றுதோஷங்களும் உள்ளன. அவற்றை நிவர்த்திக்கக்கர்மகாண்டம் உபாஸனகாண்டம் ஞானகாண்டமென்னும் மூன்றுகாண்டங்களோடுங்கூடிய நான்கு வேதங்களும் பரமேசுவரனுற் செய்யப்பட்டிருக்கின்றன. மேற்கூறிய மலம், விக்ஷேபம் அஞ்ஞானம் என்னும் மூன்றையும் சிறிதுவிளக்குவோம்.

1. மலம் என்பது பாவம், அப்பாவம் ஜன்மாந்தரங்களிற் செய்யப்பட்ட அசுபகர்மங்களாலுண்டாகிய அதர்மம், அபூர்வம், அதிருஷ்டம் என்னும் பெயர்களோடு பதிவுரூபமாய் அதாவது சமஸ்காரரூபமாயிருத்தலால், அதிசூக்ஷமமாயிருக்கிறது; ஆதலால் பிரத்தியக்ஷமாகிறதில்லை. அங்ஙனமாயினும் மனதில் நமக்கேற்படுங்கெட்ட எண்ணங்களால் அஃது அநுமானிக்கப்படுகிறது. நிஷித்தமான துஷ்கருமத்திலாவது, விஷயத்திலாவது எவனுக்கு இச்சையுண்டாகிறதோ, அவனுடைய சித்தத்தில் அசுபவாசனையிருக்கிறது என்றறியலாம். அதனுல் அவன் மலதோஷத்தோடுகூடியவனென்று அனுமானிக்கப்படுகின்ருன். அதனை நிவர்த்திக்க நிஷ்காமகர்மம், பூதயை, ஈசுவர நாமோச்சாரணம் என்பவை உதவுவனவாகும். இவற்றுள் முதல் இரண்டு உபாயங்களும், மலத்தைமாத்திரம்போக்கும். நாமோச்சாரணம் (விக்ஷேபத்தையும்) சஞ்சலத்தன்மையையும் போக்கும்.

2. விக்ஷேபமென்பது சித்தத்தின் சஞ்சலத்தன்மையாகும். எவனுடைய சித்தம் வேதாந்தத்தின் சிரவண முதலியவற்றிலாவது மகாவாக்கியத்தின் அர்த்தமாகிய தனதுசொரூபத்திலாவது ஸ்திரமாய் நிற்காமல் அந்நிய விஷயங்களில் பிரமிக்கிறதோ அவன் சித்தம் சஞ்சலமுடையதென்றறியலாம். இதனாலேயே அவன் விக்ஷேப தோஷத்தோடு கூடியவனென்று உரைப்படும். அதனை நிவர்த்திக்க, 1. ஈசுவரநாமோச்சாரணம், அஜபாமந்திரோச்சாரணம், ஈஸ்வரமூர்த்தித்தியானம் (நிர்க்குணப்பிரஹ்மசிந்தனை) முதலிய உபாசனைகள் செய்யத்தக்கனவாம். ஏனெனின் உபாசனையால் ஏகாக்கிரசித்தமாகி விக்ஷேப தோஷம் நிவர்த்தியாகிறது. 2. குருவை ஈசுவர வடிவாகவே எண்ணி சரீரம், வாக்கு, மனம், தனம் என்பவைகளாற் சேவைசெய்யப்படின் அச்சேவை கர்மோபாஸனைகளின்றியே சித்தசுத்தித்தன்மையையும் ஏகாக்கிரத்தன்மையையும் கொடுக்கும். 3. மந்தமான ஞான விருப்பினாலும் பிரீதியினாலும் கேட்கப்படும். வேதாந்த சிரவணத்தினாலாவது, அப்பியாசத்தினாலாவது பிரவிர்த்தித்தலும், கர்மோபாஸனைகளின்றியே சித்தத்துக்குச்சுத்த தன்மையையும் ஏகாக்கிரத்தன்மையையும் கொடுக்கும்.

3. அஞ்ஞானம் என்பது பிரஹ்மஸ்வரூபஆத்மாவை நான் அறியேன் என்னும் வியவகாரத்திற்கு ஏது ஆவரண தோஷமெனப்படும். அது ஆத்மஞானத்தாலேயே நிவர்த்தியாகவேண்டும்.

மேற்கூறப்பட்ட மூன்றிலிருந்தும் நாம் அறிந்து கொள்வது என்னவெனில் "மனம்போனபோக்கெல்லாம் போகவேண்டாம்" என்ற சான்றோர்வாக்கியப்படிக்கு "பட்டிமாடுபோல்" கட்டுக்கடங்காதவரை கட்டுக்கடங்க

வைக்கவேண்டியே (சோபானமுறையாய்) வேதத்திலே முறையாக முதலாவது கர்மகாண்டத்தையும், இரண்டாவது பக்திகாண்டத்தையும், மூன்றாவது (சித்தாந்தபக்ஷமாக) ஞானகாண்டத்தையும் விதிக்கப்பட்டிருக்கிறது. அவ்வப்படிகளில் கூறும் சட்டதிட்டங்களில் நன்கு ஒழுகி ஈடுபட்டு வந்தாலன்றி மேலாய உண்மைநிலையை நாம் அடையமாட்டோமென்பது திண்ணம்.

1. கர்மகாண்டவிதி:— நாம் எந்தெந்தவருணத்தில் வந்துதித்தோமோ அந்தந்த வருண ஆசிரமதர்மங்களுக்கேற்பநிஷ்காமமாய் அந்தர்சுத்திக்குக் காரணமான பகிர்சுத்தியாம் சத்கர்மாக்களை காயத்தால் ஆசார, அநுஷ்டான, ஆகார, நியமங்களால் ஒழுகி நம்மைநாய்சீர்படுத்திக் கொள்ளுவதே மலதோஷமென்னும் அழுக்கைப் போக்குதலாம்.

இதனையே இந்திரியஒழுக்கமென்றும், இதற்குமுக்கிய ஆதாரம் சாதுசங்கமும், ஆகாரநியமமும் அவசியமாமென்றும் பெரியோர் கூறுவர். அங்ஙனமின்றேல் அம்முதற்படி அமையப்பெறாது. எங்ஙனமெனில்? துர்ச்சங்கத்துடன் கூடிய மதுஉண்டவர்களின் செய்கையையும், வாக்கியங்களையும், மனதின் நிலையையும் பிரத்தியக்ஷமாய்க் கண்டறிகின்றோமாதலால் வேறு பிரமாணம் வேண்டுவதின்று.

2. பக்திகாண்டவிதி:- மேற்சொன்ன காயத்தாலாகிய சற்கருமம் சித்திக்கவே வாக்கில் இன்சொல்லும் அதன் காரணமான மனதுக்குத்தூய்மையுமுண்டாகின்றது. அங்ஙனமுண்டாயினும், "சலத்திலுள்ள அழுக்கைப்போக்க தேத்தாம்பொடியால் சுத்திசெய்யினும், சலசுபாவமானது ஆட்டத்தோடு கூடியதென்பதுபோல" கர்

மத்தால் மனம் தெளிவுபெறுமேனும் அநித்தியமான உலக போக விஷயப்பற்றுல் அடிக்கடி ("கெடியாரப்பெண்டுலம் ஆடுவதேபோல") சதாசலித்துக்கொண்டிருக்கும் மனோசங் கல்பத்தை ஒய்விக்கவே நிஷ்காமமாய் ஈஸ்வரத்தியானம் அல்லது ஈஸ்வரநாமோச்சாரணங்களை செய்யும்படி வேதத் தில் விதிக்கப்பட்டிருப்பதாகும். இதனையே கரணஒழுக்க மென்று பெரியோர் கூறுவர்.

3. ஞானகாண்டவிதி:— மேற்கூறிய இரண்டும் கை வந்தபிறகே, தெளிவுற்று ஓய்ந்த அதாவது ஆட்டமின்றிய (சலத்தில்) கண்ணுடியில் தன்னுருவம் சொச்சமாய்ப் பிரதி பலித்துத் தோன்றுவதுபோல, உள்ளத்திருக்கும் ஈசு வரவடிவத்தை ஒருமைவடிவாயுணராது ஈசன்வேறு, யான் வேறு என்றுணரப்படும் அறியாமையை (ஆவரணதோஷ மென்னும் அஞ்ஞானத்தை) நிவர்த்தித்தலே ஞானமாம் இஃது சுருதிகுரு உபதேசவாக்கியங்களை முறையாக சிரத் தாபக்தியோடு ஊன்றிச் சிரவணமனனுதிகளால் ஐயந்திரி பறக்கேட்டுத்தெளிந்து சாட்சாத்காரத்தையடையப்பட்ட வர்கட்கே அவ்வாவரண தோஷம் நீங்கும் என்பதாம். இதனையே ஜீவவொழுக்கமென்று பெரியோர் கூறுவர்.

## பிரமாணம்.

1. பூரிக்குங் கனசச்சிதானந்தத்திற் பொய்சடந் துயர் மூன்றுந்
தூரத்தாயி னுந்தோன்று பாழ்விபரீதந்
துடைப்ப தெப்படியென்று
னீரிற்றேன்றுந் தன்னிழறலேகிழதாய்
நின்றலேயினுநேராய்
பாறிற்றேன்றிய தன்னை நோக்கிடலந்தப்
பாழ்நிழல் பொய்யாமே.

2. உன்முகம் போற்கண்ணுடிக் குள்ளொரு
முகங்கண் டாற்போற்
சின்மய வடிவின் சாயைசித்துப்
போற்புத்தி தோன்றும்
நின்மல விருத்தியந்த நிழல்வழி
யாயு லாவுந்
தன்ம நன்மகனே யித்தைத்
தானன்றே ஞானமென்பார்.

(கைவல்லிய நவநீதம்)

இதற்கப்பால் ஸ்வானுபவ தனது நிஜசொரூப நிலையே எங்குமாய் அகமும் புறமும் ஒத்து விளங்குமெனவும். அதுவே ஞான அஞ்ஞானரகித நிலையான, ஜீவேஸ்வர ஐக்கியமாம். (ஆன்ம ஒழுக்கமென்றும்) வேதகுருஸ்வானுபவிகள் கூறுகின்ற மெய்ப்பொருள் விளக்கமாம். இவற்றை அவரவர் சுவானுபவத்தில் கண்டறிந்தாலன்றி "ஒருமையுடனினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவுவேண்டுமென்பதுவும் உள்ளும் புறமும் ஒத்தே பேசுவதும், பார்ப்பது மாயநிலைகிட்டாது. எனவே எறும்பு முதல் யானை ஈருகவுள்ள ஜீவபோதத்தைத்தள்ளி, ஏகமாயிருக்கும் சமானக் கண்ணால்பார்க்கும் சமதிருஷ்டியை நாம் சற்குரு கிருபையால் பெற்றுலொழிய சமரச சுத்தசன்மார்க்க நெறியை அடையமாட்டோமென்பது திண்ணம். சமரச சுத்தசன்மார்க்கமென்பது வாசாக் ஞானமல்ல.

கண்ணுடிபோல வேல்லாங் காட்டுந் திருவருளை
உண்ணுடி யையாவுருக வைத்தா லாகாரோ.

ஐவகை யெனும்பூத மாதியைவகுத் ததனு
ளசரசர பேதமான

யாவையும் வகுத்து நல்லறிவையும் வகுத்துமறை
யாதிநூலையும் வகுத்துச்
சைவமுதலாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்த நீயுன்னை நானணுகவுந்
தண்ணருள் வகுக்கவிலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே. (தாயுமானவர்)

சீவபேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை
யாவவாமவரவ ரதிகாரங் களறிந்து பக்குவ நோக்கிப்
பூவலர்ந்து பின்பலங்கள் காட்டுவன போற்பூருவஞ்
[சித்தாந்தம்
காவல்வேதங்க ளிரண்டையும் வசணிக்குங் காண்டமூ
[வகையாலே.
(கைவல்ய நவநீதம்)



உ

# வேதாந்த சாஸ்த்திரங்களில் "வாதம்" என்று சொல்லப்படுவதென்ன?



குதற்கமின்றி, தற்கரீதியாய் ஆத்ம அனாத்மாக்களை சந்தேக விபரீதமற நவநவமாய் சற்குருமுகத்தால விசாரம் செய்வதே (வாதம்) என்று சொல்லப்படும். அதில் முக்கியமாய்க் திரிகரணங்களும் ஒத்து மிகவும் சாக்கிரதையாக கேட்டு சிந்தித்துத் தெளியவேண்டிய அம்ஸங்களைமட்டும் இதில் சுருக்கமாக சொல்லப்படுகிறது அஃதாவது

விவர்த்தவாதம், பரிணாமவாதம், ஆரம்பவாதம், உற்பத்திவாதம், விருத்திவாதம் என்பனவாம் விவர்த்தம் என்பது கயிற்றரவு, கானல் நீர் கனவுலகுபோல்வது. பரிணாமம் பால் தயிர் போல்வது. ஆரம்பம் பிதா மகன் போல்வது. உற்பத்தி மண்ணும் கடமும் போல்வது. விருத்தி சித்திரப்படம்போல்வது, இன்னும் திருஷ்டி சிருஷ்டி வாதம் அஜாதவாதம்' அவச்சேயவாதம், ஆபாசவாதம், பிம்பபிரதிபிம்பவாதம், சிருஷ்டி திருஷ்டிவாதம், ஏகஜீவவாதம், நானாஜீவவாதம், என எண்வகையாகவும் கூறப்பட்டிருக்கிறது. அஃதேதெனின்

## 1. திருஷ்டி சிருஷ்டி வாதம்.

எப்போது திருஷ்டி உண்டாகிறதோ அப்போதுதான் ஜெகத் உண்டாகிறது, பூர்வம் இருக்கவில்லையென கூறுவது.

## 2. அஜாதவாதமென்பது என்ன ?

பிரம்மசொரூபமே எப்போதும் உள்ளதென்றும் ஜகத்தொருக்காலும் உண்டாகவே இல்லையென்றும் கூறுவது. இதுமுடிந்தநிலை. சுவானுபவிகளுக்கே விளங்கும் (பரஞானிகள் அனுபவம்).

## 3. அவச்சேதவாதம் என்பது என்ன ?

அந்தக்கரணத்தால் அளவிடக்கூடிய எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் ஒன்றே ஒழிய, இறண்டில்லையென்றும், அந்தக்கரணம் அசைந்தாலும், ஜீவன் அசையாதிருக்கும் நெறியை, குருமுகத்தால் விளங்கிக்கொள்வதே சிவம் எனக்கூறுவது.

## 4. ஆபாசவாதமென்பது என்ன ?

விவகாறதிசையில் அந்தக்கரண பிறதிபிம்ப ஆபாசஞன ஜீவசேதனம் அனந்தம் உண்டு. அவனுக்கே சகல வியவகாறமே அல்லது சாக்ஷியாகிய தனக்கில்லையெனக் கூறுவது.

## 5. பிம்பபிரதிபிம்பவாதமென்பது என்ன?

பிம்பத்தைதவிற பிரதிபிம்பம் வேறல்லவெனவும் ஆரோபமே இல்லையெனக்கூறுவது.

## 6. சிருஷ்டி திருஷ்டி வாதமென்பது என்ன?

ஜெகத்துபூர்வம் இருந்துதான் தோற்றப்படுகிறதெனக் கூறுவது.

## 7. ஏகஜீவவாதமென்பது என்ன ?

இந்தசேதன சேதனப்பிரபஞ்சமுழுவதும் ஒரு ஜீவனுடைய, கற்பனை, எப்படியெனில் சொப்பனத்தில் காணப்பட்ட, சேதனசேதனப்பிரபஞ்சமுழுவதுஞ் சொப்பன

புருடனையன்றி மற்றொருபுருடனால், எப்படிக்கற்பிக்கப் படவில்லையோ; அதுபோல ஜாக்கிரத்திலுள்ள சேதனசே தன பிறபஞ்சமுழுவதும், ஒருஜீவனுடைய கற்பனையெனக் கூறுவது.

## 8. நாநாஜீவவாதமென்பது என்ன?

மாயை அதின்குணம். அதின் காரியமாகிய ஜீவேஸ்வரஜகத்துக்களென்னும் நாநாஜீவர்களையொப்பி ஏகரூபமாயிருக்கின்ற வஸ்துவைத்தெரிவிக்கிறதற்கு (சோபானமாய்) படிக்கிரமமாயிருக்கின்றதால், நாநாஜீவவாதமென்றும், இன்னும் நான், கர்த்தா, போக்தா, ஞாதாவென்கிற நாநாவித ஜீவபேத, வேறுபாடுகளை, நான் அகர்த்தா அபோக்தா அசங்கன் சின்மாத்திரன் என்கிர தத்துவஞானத்தால், வாதித்து ஏகசொரூபமாயிருக்கிறவஸ்துவை தெரிவிக்கிறதில் சோபானக்கிறமமாயிருத்தலின், நாநாஜீவவாதம். எனப்படும்.

ஞானயோகத்தால் பிரம்மத்தையறிந்து அவ்வடிவமாகவே நிலைத்தவன், பிராமணன்.

1. ஜீவாத்மாவாவது:— தப்த அயபிண்டம்போல, அதாவது காச்சின இரும்புருண்டையைப்போல ஜீவனுடைய சரீரத்தில் சம்பந்தித்திருப்பவன்.

2. அந்தராத்மாவாவது:— கமலபத்திரோதகம் (தாமரையிலையும் தன்னீரும்போல) ஒட்டியுமொட்டாமலிருப்பவன்.

3. பரமாத்மாவாவது:— சூரியனானவன் பிரபஞ்சவிவகாரத்துக்குச்சாக்ஷியாயிருப்பதுபோல சுழுத்தியவஸ்தைக்கு சாக்ஷியாயிருப்பவன்.

4. ஞானாத்மாவாவது:— பஞ்சகோசங்களையும் பஞ்சவிவகாரங்களையும் அறிந்துகொண்டு விலக்ஷணமாயிருப்பவன்.

5. ஆத்மாவாவது:— தனக்கிறண்டாவதில்லாமல் தானாகயிருப்பது.

1. சாக்கிரமாவது:— சர்வேந்திரியங்களினால் பாகிய ஞானத்துடன் விஷயகாரமாய், பரிணமித்து கர்த்ருத்வாதியாகாரமாய், ஸ்திரமாய் எந்தமட்டும் விவகரிக்கப் படுகிறதோ அந்தபட்டும் சாக்கிரம்.

2. சோப்பனமாவது:— இந்திரியங்களினால் பாகியார்த்தஞானமின்றி தானே சாக்கிரத்தின் வாசனாபரி கல்பிதவிஷயாகாரமாய்ப் பரிணமித்து கர்த்ருத்துவாதியா காரமாய் அஸ்திரமாய், எந்தமட்டும் விவகரிக்கப்படுகிற தோ அந்தமட்டும் சொப்பனம்.

3. சுழுத்தியாவது:—இந்திரியங்களின் பாஹ்யார்த்த ஞானமும் மனதின் விஷயகாரப்பரிணாமமும் கர்த்ருத்வாதி வியாபாரமுமின்றி, தானே விருட்சத்தையடக்கிவைத்துக் கொண்டிருக்கிற வித்தைப்போல, காரணாத்மகமாக புத்தி எந்தமட்டும் அஞ்ஞானத்தில் லயமடைந்திருக்கிறதோ அந்தமட்டும் சுழுத்தி.

4. அன்றியும் துரியம் துரியாதீதமென இரண்டு அவஸ்தைகளுண்டு. இவற்றுள், துரியம் சாக்கிரத்தில் அகக்கமலமழிந்து மனோவியாபாரமிழந்து பரமாத்ம, சிந்தனைபுரிவதே துரியம்.

5. துரியாதீதமாவது:— பிரம்மானுசந்தானவிருத்தியும் நழுவி மனமானது பாலில்கலந்த ஜலம்போல ரமிப்பதே.

6. தாவரங்களுக்கு சுழுத்தி ஒன்றும், திரியக்குக ளுக்கு சொப்பன சுழுத்தியிரண்டும், மனிதர்களுக்கு சாக்கிற சொப்பன சுழுத்தி மூன்றும், தேவர்களுக்கு சாக்கிற மொன்றும் உன்மத்தருக்குதுரியமும், சிவயோகிகளுக்கு துரியாதீதமுமாம்.

7. நனவிற்சுழுத்தியாவது:— இந்திரியங்கள், தத்தம் கோளகைகளிலேயே இருப்பது. நனவு-சாக்கிரம்-விருத்தி மனோவிஷயத்தில் செல்லாமல் சொரூபத்தினிடத்திலேயே யடங்கியிருப்பது.

8. சாக்ஷி சைதன்னியத்தை தானென்கிறது, சுபானுபவமல்லாமல் (பரமார்த்தமல்லாமல்)வாசாக்ஞானமான உபசாரமல்ல.

9. அவஸ்தாத்திரய சாட்சியாவது:— கூடியுங்கூடாமலுமிருப்பது. அவஸ்தாத்திரயங்களைவிட்டு நீங்காமலிருக்கிறபடியால் கூடியும், அவஸ்தாவிகாரங்களைதானடையாதபடியால் கூடாமலுமிருப்பதே. சாக்ஷி.

10. மயக்கமாவது:— 1. சகத்து சத்தியமெனல், 2. சரீரத்தை நானெனல், 3. கர்தாபோக்தர்வெனல், 4. ஜீவன்வேறு ஈசுரன் வேறெனல், 5. தான் ஞான சொரூபியாயிருந்தும் அஞ்ஞானியெனப்பிதற்றுதல்இவ்வைந்தும் பஞ்சப்பிராந்தி யெனப்படும். மயக்கம், பிராந்தி, அஞ்ஞான மென்பது ஒரு பொருட்குறித்த பலபெயர்.

11. "ஜீவன்முத்தனுக்கு சாஸ்திரங்களில் கூறும் பெயர்கள் ஜீவன்முத்தன், திடப்பிரக்ஞன் அதிவர்ணாச்சிரமி, குணாதீதன், பகவத்பக்தன், பிராயணன், என ஆறு பெயருண்டு.

12. ஜீவன்முத்தன் லக்ஷணம்:— ஜீவசிருஷ்டியும் ஈஸ்வரசிருஷ்டியுமுள்ள ஜர்க்கிறத்தில் ஜீவசிருஷ்டியொழிந்த

வனே ஜீவன், முத்தன். ஜீவசிருஷ்டி என்பது என்ன. காமம், குரோதம், லோபம், மோகம், மதம் மாச்சரியம் ஆகிய ஆறு. ஈஷ்வரசிருஷ்டி என்பது ஸ்தூல சரீரம், சூக்கும சரீரம் முதலிய சாக்கிரப் பிரபஞ்ச விவகாரம்.

உதாரணம்.

1. ஏரிக்கரையேறினேன், 2. இரண்டு பாஷை கற்றேன், 3. காக்கைக்கண், 4. பாம்புக்கண், 5. யானைத்துதிக்கை; 6. மலைமேலேறினேன். 7. பூனைக்கண், 8. உச்சிப்பானு, 9. யாழ்ப்பாணக் கப்பலோட்டுபவன். இவற்றுள்

1. கரையில் செல்பவனுக்கு உள்ளும் புறமுமுள்ளவைகள் தெரிவதுபோலும்.
2. இறண்டுபாஷை கற்றவனுக்கு ஒவ்வொரு பாஷை கற்ற இருவர்கள் சொல்லும் விஷயம் தெரிவதுபோலும்.
3. காக்கைக்கண் ஒரு கண்ணொளியினால் இறண்டுபக்கமுமறிதல் போலவும்.
4. பாம்புக்கண் ஏககாலத்தில் ரூபத்தையும் சப்தத்தையுமறிதல்போலும்.
5. யானைதுதிக்கை இடுகலேற்றலும் தந்தமுமறிதல் போலவும்.
6. மலையேறினவன் மலையிலுள்ள பொருள்களையும் பூமியிலுள்ள பொருள்களையுமறிவதுபோலவும்.
7. உச்சிப்பானு உதயகிரியையும் அஸ்தகிரியையும் அரிதல் போலவும்.
8. பூனைக்கண் இறவும் பகலும் தெரிதல் போலவும்.

9. யாழ்ப்பாணத்து கப்பலில் செல்பவனுக்கு இருகரையும் தெரிதல்போலவும்.

ஜீவன்முத்தன் பிரபஞ்சத்தையும் அதன் விருத்திகளையுமறிந்துகொண்டும் பிரமாகாரசிந்தனையாய் சிரவணமனன நிதித்தியாசனத்திலிருப்பவனே. தியானிப்பவனையும் தியானத்தையுமிழந்து தியானிக்கப்படுகிற வஸ்துவாயிருக்கிற சித்தமே சமாதி.

ஜீவன்முத்தியாவது; கர்த்துருத்துவ, போக்த்துருத்துவம் நீங்குவதே.

இன்னம் பிரபஞ்சப்பிரதீதியு (தோற்றத்து) டனே அத்துவித (பிரம்ம) சொரூபமாயிருப்பதே.

திடப்பிரஞ்ஞன்:— சற்குருவினனுக்கிரகத்தால் ஜீவப்பிரம்மங்களின் ஒருமையையறிந்து சமாதிகூடி கலங்காது அறிவாகாரமாயிருப்பவன்.

குணாதீதன்:— திரிகுணங்களின் தன்மைகளைக்கடந்து அவஸ்தாத்திரயங்களுக்கு விலக்ஷணமாயிருப்பவன்.

பகவத்பக்தன்:— சகல பிரபஞ்ச வஸ்துக்களிலும் சமமாய் பிரம்மத்தைப்பார்க்கின்ற தியானயோகமனதையுடைய யோகியானவன்; தான் அவ்வஸ்துக்களிலெல்லாமிருப்பதாகவும் பார்ப்பவன்.

விதேகமுத்தனுவது:— நிற்விகர்ப்ப சமாதிலிருப்பவன்.

விதேகமுத்தியாவது:— பிரபஞ்ச பிரதீதியின்றியத்துவித சொரூபமாயிருக்கிற ஜீவன்முத்தியின் பரிபாகமேவிதேகமுத்தி.

விதேககைவல்யமடையுங்கிரமம்.

மேல் எக்காலத்திலும் எத்தேசத்திலும் யாதொரு சரீரமும் அடையாது சச்சிதானந்தப் பிரஹ்ம சொரூபத்தி

லிருப்பதே விதேக கைவல்யம். அந்த விதேக கைவல்லிய மடையுங்கிரமமாவது:— முமுட்சுக்குநித்திய கர்மானுஷ்டானத்தால் தர்மோற்பத்தியும், தர்மோற்பத்தியால் பாபக்ஷயமும், பாபக்ஷயத்தால் சித்தசுத்தியும், சித்தசுத்தியால் சமுசாரதோஷதரிசனமும், சமுசாரதோஷதரிசனத்தால் விஷயவிரக்தியும், விஷயவிரக்தியால் மோக்ஷாபேக்ஷையும், மோக்ஷாபேக்ஷையால் பாகியகர்மபரித்தியாகமும், பாகியகர்மபரித்தியாகத்தால் யோகாப்பியாசமும், யோகாப்பியாசத்தால் பிரத்தியகாத்மப்பிரீதியும், பிரத்தியகாத்மப்பிரீதியால் தத்துவமசிமகாவாக்கியவிசாரமும், தத்துவமசிவாக்கியவிசாரத்தால் அத்வைதஞானமும், அத்வைதஞானத்தால் அவித்யாநாசமும், அவித்யாநாசத்தால் துவைதபிராந்திநஷ்டமும், துவைதப்பிராந்திநஷ்டத்தால் சுகதுக்கபரித்தியாகமும், சுகதுக்கபரித்தியாகத்தால் இராக்கதத்துவேஷஹானியும் இராக்கதத்துவேஷஹானியால் விதிநிஷேதநிரஞ்சன (நீக்க)மும், விதிநிஷேதநிரஞ்சனத்தால் புண்ணியபாபக்ஷயமும், புண்ணியபாபக்ஷயத்தால் தேகஅபாவசித்தியும், தேகாபாவசித்தியால் சர்வபாபவிமோசனமும், சர்வபாபவிமோசனத்தால் சர்வோத்கிருஷ்டமான பரம ஆதானமும் புநராவிருத்திரகிதமும் (மீட்சியின்றியதும்) சகல சாஸ்திரமுடிவாய்நாமசாதிக்கிரியாவாசனைகள் புகாததும் மனோவாக்குகளுக்கெட்டாததுமான நித்தியாநந்தசொரூபமாயிருத்தலாகிய விதேககைவல்லியமுண்டாம். இதுவே சுருதி ஆசாரியப் பிரசாதசித்தி; இதுவே சகல சாஸ்த்திரார்த்த நிர்ணயம்.

அனேகவிதலக்ஷண விஸ்தாரத்துடனே கூடியிராநின்ற மகாமாயாமோகத்தை என்னேரமும் எடுத்துவிழுங்குகிறதே வேலையாயிருக்கின்ற ஸ்ரீசங்கராசாரிய குருமூர்த்திகளினது பாதாரவிந்தங்களுக்கு நமஸ்காரம்.

உ

# சன்மார்க்கமென்றால் என்ன?



சத்மார்க்மென்பதையே சன்மார்க்கமென சொல்வதுண்டு. சத்துஎன்பதற்கு பொருள் எங்கும், என்றும், எந்நிலையிலும் மாறுபாடுராததும், அழியாப்பொருளாய் உள்ளதுமாய கடவுளுக்கே சத்துயென்ற பெயர் சுருதிகளில் கூறப்பட்டிருக்கிறது. அங்ஙனமாயின் எங்குமாய் நிறைந்திருக்கும் போக்குவரவற்ற பொருளாம். கடவுளுக்கு, மார்க்கமென்னும் சொல்லால், போதல், வருதல் என்றதைக்குறிக்கும் சொற்கள் முறண்பட்டதாக வல்லவோ இருக்கிறது. ஆயின், உண்மைப்பொருளாகிய சத்வஸ்து தூரத்தே உள்ளதல்லவே; அதற்குச்செல்லும்மார்க்கம் என்பது எவ்வாறு பொருந்தும்? சத்பொருள் உன்னிடமே உள்ளது. எப்போதும் உன்வசத்தில் இருக்கின்றது. ஏற்கனவே நீ அதனிடம் உள்ளவன்தான்; இல்லையில்லை, நீயே அதுவாகிறாய்; (நீயே அது) இப்படி இருப்பதால் சத்வஸ்துவிற்குச்செல்லும்வழியென்பது விநோதமானது அல்லவா? அதைப்பற்றி எவ்வாறு பேசமுடியும். தெய்வானுபவம் உனக்கு ஏற்படவேண்டும்; கடவுள் என்ற உணர்வை அடையவேண்டும், என்ற இதுமுடிவுபெற வேண்டிய ஒன்றல்ல; செய்துமுடிக்கவேண்டியக்காரியமல்ல; நடைபெறவேண்டியநிலையில்இல்லை, ஏற்கனவே நடைபெற்றதாகிறது. நீ ஏற்கனவே அதுவாகிறாய் என்பதேமுடிபு.

ஆக இவ்விதம் கூறிவிட்டால் மர்க்கம்யென்பதற்கு பொருள்தான்யாதென அறியப்புகின் பொய்ப்பொருளாய்

காலத்திரயத்திலுமில்லாத நாமரூபதேகாதிபிரபஞ்ச அசத் பதார்த்தங்களை யான்யெனதென்றபிமானித்து அவஸ்த் தாத்திரயங்களிலும் ஊன்றிப்போய்நிற்கும். சித்தியபுத்தி யை மீட்டுக்கொண்டுவந்து என்றுமுள்ள தன்னிலையில் தான கலாது நிற்கச்செய்தலேயாம். அஃதாவது எவ்வெழி ஏகி னானோ அவ்வழியே ஒருவன் மீண்டும் தன்வீடுவந்து சேர் வதுபோலாம். எங்ஙனமெனில் அஞ்ஞானகாரியமே, போதல்வருதலென்ற கிரியாபாகத்தை ஏற்றுக்கொள்ளும். ஆனால், ஞானமே வடிவான சத்சொரூபமோ அஃது இருந்தபடியே இருக்கும்.

உதாரணம், மனிதன் இருக்க வீடுதேள்வை. அது போல அறியாமையானது தானேர்முதலாகயிருந்து நடித் தற்கு இடம்தந்து இருப்பது அறிவு. ஆனால், வீட்டை விட்டு மனிதன் வெளியேபோவான் வருவானாயினும் வீடு இருந்தவிடத்தேயே இருக்கும் யென்பதுபோல அறிவில் (சத்சொரூபத்தில்) அறியாமையான அசத்பதார்த்தங்கள் தானே முதல்போலயிருந்து ஓர்சமயம் தோன்றிமறையும் அங்ஙனமாய அவித்யாமயமான சரீரத்திரயாதி கோசபா சப்பின்னல்களான அறியாமையாம் அசத்சடத்துக்கமய மான அஞ்ஞானத்தை சின்னமாக்குவதே, அஃதாவது சற்குருமுகமாய் விசாரித்தறிவதே இங்குமார்க்கமென்னும் சொல்லுக்குப் பொருளாம். ஆனால், சத்சொரூபத்துக்கு மார்க்கமென்ற சொல்லே இல்லை. அது சத்சொரூபமாக வேயிருக்கிறது. இத்தகைய சத்சொரூபானுபவமான நிலை யை சுவானுபவத்தில் கண்டறிந்தவர்கட்கே, நானென்பத றும். நானென்பதற்றவர்கட்கே, கடவுள்வேறு பிரபஞ்சம் வேறு என்பதறும், அவையறவே விஷமப்பார்வை நீங்கும், அவ்வவசரத்தில் வெளிப்படுதலாகிய சமாசபார்வையே சமரஸமென்றேற்படும். இஃதே சுத்தமாகையால், இதனைத் தான், சமரசசுத்தசன்மார்க்கமெனப் பெரியோர்களுரைப் பார்கள் சுருதிதார்ப்பரியமும், அதுவே.

உ

# "முத்திநெறி என்றாலென்ன?"



தாயுமானவர் தமது அருமருந்தன்னபாடல் ஒன்றில் "வேறுபடும் சமயமெல்லாம் புகுந்துபார்க்கில், விளங்கு பரம்பொருளே நின்விளையாட்டல்லால், மாறுபடுங்கருத்தில்லை; முடிவில் ஞானவாருதியில் நதித்திரள் போலவயங்கிற்றம்மா" என்றருளியுள்ளார். ஸமரசச் செல்வராகிய அப்பெரியாரது கருத்து, "விண்ணின்றும் விழும் நீரெல்லாம் இறுதியில் கடலைப்போய்ச் சார்வதுபோலவே, பல தெய்வங்களை வழிபடுதலும் ஒரே பரம்பொருளைக் குறித்துச் செல்கின்றது" என்ற தொன்றுதொட்டு வந்த கருத்தையே தழுவி நிற்கின்றது. சமயங்களாகிய ஆறுகளெல்லாம் முடிவிற்புகும் கடலாவது-ஞானவரம்பாகிய மோனமேயாகும் என்றார் தாயுமானவர், இதன் உட்பொருளாவாது, ஞானத்தைப்பற்றியும் ஞானநெறிகளைப்பற்றியும் இவைகளையொட்டிய பிறபொருள்களைப்பற்றியும் விரிவாக எடுத்துரைக்கும் சமய நூற்கல்வியின் தலையானபயனாவது, உரையையும் மனத்தையும் கடந்த அனுபவமே யென்பதாகும். பரம்பொருளைப்பற்றிப் பாக்கக்கூறும் நூலறிவின்பயன் பரம்பொருளை அனுபூதியிற்காண்டலேயாம். பரம்பொருளை அனுபவத்திற் காணும்போது, உயர்ந்த ஆனந்தத்தில் ஒருவன் அமிழ்ந்துவிடுகிறான்; அப்போது தன்னையே அவன் மறந்துவிடுகிறான். 'நான்' என்பதை முற்றும் இழந்தநிலையிலேயே முழுப்பேரின்பம் துய்க்கப்படுகின்றது. அந்தப் பேரின்ப அனுபவத்தை இன்னவாறென்று எடுத்துரைக்கச்செல்லும் 'நான்' என்பதே ஒழிந்துவிடுகிறது. ஆதலின் அதனை உரைப்பவர்யாரே! அவ்வமயம் அனுபூதிமயமாயுள்ளது

சொல்லுக்கும் அறிவிற்கும் அடங்காததொன்றாகிறது. அப்போது மோனமே நிற்கின்றது. இந்நிலையே உயர்வற உயர்ந்த நிலையாம்.

பரம்பொருளைப்பற்றி உள்ளவாறு உரைக்கவேண்டின் பிறர்க்கு உணர்த்தவேண்டின், அதற்குவழியொன்றே. அதைச்சொல்லாமற்சொல்லக் கண்மூடி மௌனியாகி நிஷ்டையில் இருந்து ஆனந்தத்தில் அழுந்தியிருத்தலே சிறந்த முறையாகும், இம்முறையையே, சனகாதிமுனிவர்க்கு உயர்ந்த நிலையாக உபதேசிக்கச் சிவபெருமான் கையாண்டார்.

ஆயினும், சொல்லுக்கு அடங்காத பரம்பொருளைப் பற்றியும்.ஆனந்தத்தைப்பற்றியும் சொல்லாற்குறித்தல் ஒருவாறு இயலுகின்றது; அவசியமுமாகின்றது. அனுபூதிமான்களெல்லோரும் ஒரே பொருள்படும் சொற்களாலேயே பரம்பொருளைக்குறித்துள்ளனர். 'சத்சித் ஆனந்தம்' என்பர் ஒரு சாரார். உலவா இன்பச்சுடர், என்றும் 'உயர்வற உயர்நலம் உடையவன், என்றும்' இயல் உண்மை அறிவு இன்பவடிவாகி நடிக்கும் மெய்ப்பொருள், என்றும் கூறுவர் மற்றொரு சாரார். முத்திநிலையைப் பலர் பலவாறாக உரைப்பினும், எவ்வகையான துன்பங்களையும் போக்குவதும், பேராத இன்பத்தை அடைவதுமாகிய இலக்கணங்கள் பொதுவாகும். சோகத்தையும் மோகத்தையும் பயத்தையும் போக்கடிக்கக்கூடியது எதுவோ அதுவே உயர்ந்த நெறியென்று பகவான் உத்தவருக்கு உபதேசஞ் செய்தருளினர். எல்லாவித சோகத்தையும் மோகத்தையும் பயத்தையும் ஒழிக்கக்கூடியது மெய்ப்பொருட்காட்சியொன்றே. அம்மெய்ப்பொருட்காட்சியைப் பெறும்போது, அதைப்போன்ற ஒரு பொருள் அதுவரை பார்த்திராமை

யால் ஆச்சரியமான காட்சியாகின்றது. அதைப்பற்றிப் பேசும்போதும் ஆச்சரியம் என்றேபேசுகிறார்கள். ஒப்பதும் மிக்கதும் இலாதது பரம்பொருளாதலின், அதன் காட்சியை எய்துவார், அதை மேலானது என்றும், இணையற்றதென் றும், கூறுவதன்றி வேறறியார், அனுபூதிக்கே விளங்கும் அப்பொருளையும் பேரின்பத்தையும் உரைக்க முயன்றால், அது உரையில் அடங்காததாக முடிகின்றது; தன்னையும் மறந்து அறிவையும் தாண்டிநிற்கும் நிலையில்பெறும் அனுப வத்தை, 'நான்' எனும் உணர்ச்சிமீண்டபின் அறிவுக்கு உள் ளடங்கிப்பேசுதல், ஊமை தான்கண்ட கனவை ஒருவாறு வெளிப்படுத்துதல்போன்ற ஒரு செயலாகுமன்றி வேறு யாது? குறிப்பாகக்காட்டுதல் இயலும் எனினும், அனுபூதி பெற்றவர் அதை வெளிப்படுத்தும்போது, அவரவரது அறி விற்கும் இயல்பிற்கும் ஏற்றவாறன்றோ அதைப்பற்றிப் பேசுவர். இராமபிரானது திருக்கதையை வாசிக்கும் தோறும் நால்வர் ஆனந்தம் எய்துவதாகக்கொள்ளு வோம்; அவர்கள் எய்தும் ஆனந்தம் ஒன்றாயினும், அதைப் பற்றி உரைக்கும்போதும், உவமானங்களால் விளங்கும் போதும், காரணகாரியமுறைக்குக் கட்டுப்படுத்திப்பேசும் போதும் அவர்கள் தத்தம் மனப்போக்கிற்கும் இயல்பிற் கும் தக்கவாறு வெவ்வேறாகப் பேசுவார்களன்றோ? உதா ரணமாக, ஒருவர் தாம் உலகவாழ்க்கையில் பிறசமயங் களில் அல்லற்படுவதினின்றும் ஒழிவுபெறுதலே அவ்வின் பத்திற்கு காரணம் என்னலாம்; இன்னொருவர் இராமபிரா னது தூயஅன்பு, இரக்கம், வீரம் முதலிய கலியாண குண ங்களைப்பற்றிச் சிந்திக்கும்போது மனம் அவனுடைய குண வழகில் ஈடுபட்டு அதிலேயே அழுந்திக்கிடத்தலே ஆனந் தத்திற்கு ஏதுவாகும் என்னலாம்; இன்னொருவர் தாம் அக்கதையினிடத்து மனதை நிலைநிறுத்தும்போது, மனம்

எளிதாக ஒருவழிப்பட்டு விருத்தியின்றி ஒடுங்குதலின், பேரின்பம் தானாக நமது உண்மையியல்பினின்றும் ஊறுகின்றது என்னலாம்; இவ்வாறே வேறுவழியாக வேறொருவரும் கூறலாம். ஆயினும் அனுபவம் ஒன்றன்றோ? அது ஒன்றாயினும், அதை உரைக்கும் வழிகள் பலவாறாதலில் வியப்பில்லை.

பரம்பொருளின் எண்ணரும் குணங்கள் பலவற்றில் ஒன்றில்ஈடுபட்டு அதைநுகர்ந்தவன் அவ்வாயிலாகவன்றி வேறுஎவ்வாறு பேசுவான்? இறைவனது ஒருகுணத்தையே முழுதும் சுவைத்தார் இவர் என்பர் ஆன்றோர்; அக்குணத்தில் ஒருதுளியை நுகர்பவனே அமிருதத்வம் (இறவாநிலை பிறவாநிலை) என்னும் நிலையை 'அடைகிறான்எனில், ஒருதுளியை நுகர்பவனும் ஒருநாழி நுகர்பவனும் பெற்றபேறு ஒன்றேயன்றோ? ஆதலின் அவரவர் தமதமது அறிவு அறிவகை வகை, அறிவிற்குள் அனுபவத்தையொடுக்கிப் பேசுவர். யானையின் காலைத்தொட்ட குருடர் அதைத் தூண்போன்றது என்றும், அதன் செவியைத்தொட்டவர் அதை முறம் என்றும் கூறும்போது, இருவரது கூற்றும், வெவ்வேராயினும், தொட்டது உண்மையே. அவரவர் கூறும் பகுதியும் உண்மையே; உரைகள் முரண்பட்டாலும் அனுபவத்தில் முரணில்லையன்றோ? அனைவரும் தொட்டதும் உணர்ந்ததும் யானையையேயன்றோ? மேலும் உணர்தற்கரிய தனை உணர்த்தும்போது, அவரவர்கூறும், மொழிகள் பிறமொழிகளோடு பொருந்தாமற்போயினும் என்னை? ஒருபொருளையே பலர்தமது இயல்பிற்குத்தக்கவாறு பலவாறு வருணிக்கின்றனர்.

ஒரே நீர்வீழ்ச்சியின் அழகை ஒரு கவியும் ஒரு சித்திரக்காரனும் ஒருபக்தனும் ஒருயந்திரவேலைக்காரனும் அனு

பவித்தாலும், மலையெனும் மங்கை தன்மார்பில் முத்தாரம் அணிந்தனளோ என்பான்கவி; பொருள்களின் நிறங்களை யும் வானத்தின் நிறத்தையும் நீரின் இறக்கத்தையும் உண் மைமாறுபடாது சித்திரரூபமாக எழுதிவெளியிடுவான் சித் திரம்வல்லான். ஒருபக்தன் மலையை இறைவனாகவும், அருவியை அவனது அருள்வெள்ளமாகவும் நினைந்து இன்புறுவான்; அவ்வாறே வெளிப்படுத்துவான். ஒரு யந் திரவல்லான் அதன் சக்தியை ஒருயந்திரத்தார் பயன்படுத் தும் வழியையும் அதனல் இயற்றக்கூடிய ஆச்சரியமான வேலைகளையும் பற்றிச்சித்தித்து, தன்கருத்தை ஒருதக்கயந் திரத்தின் மூலமாகவே வெளிப்படுத்திக்காட்டுவான். இது வே இவ்வாருகுமாயின், அப்ராகிருதம் (இயற்கைக்கும் சடப்பொருட்கும் அதீதமானது) என்று கருதப்படும் பரம் பொருளை அனுபவிக்கும்போதும், அதனைவெளிப்படுத்த முயலும்போதும் ஒருவன் தனது பழையவாசனைருசி முதலியவைகளுக்கு ஏற்றவாறு ஒருவாரு அதனை அனுப வித்து, ஒருவாறு அதனை வெளிப்படுத்துதல் இயல்பேயன் ரூே? உலகமக்களது (ஆன்ருேர் உள்பட) அறிவும் ருசி யும் பலவாறு வேறுபட்டிருத்தலின், ஒரேபொருளை நேரே அனுபவிக்கும்போதும், அவ்வனுபவத்தை உரைக்கும் போதும், வேறுபாடுகள் உண்டாதல் வேண்டுமாதலின், அனுபவத்தைப்பற்றிய உரைகள் பலவாராயினும் அனுப விக்கப்பட்ட பொருள் ஒன்ருகுமன்ருே? இறைவன், இராமபிராஞக் திருவவதாரஞ்செய்தபோது, "ஓவியத்து எழுதஒண்ணு" அவரது வடிவழகு, தாள் கண்டாரைத் தாள் ஒன்றையே காணும்படிக்கும், வேருென்றை நினை யாதபடிக்கும் ஆனந்தத்தில் அழுந்தச்செய்தது; அவ்வா ரே ஒவ்வொரு உறுப்பும்; அன்னேர் அந்தந்த உறுப்பின் அழகையேஇராமனது அழகாகக்கூறிமகிழ்வர்; அப்போது

வார்த்தைகள் மாறுபடினும், ஒன்றுக்கொன்று முரணினும் அனுபவித்த அழகு எம்பிரானது அழகேயன்றே? அந்த இராமபிரானது அழகை நேரேகண்டவர்க்கு முத்தியெனில், அவரது திருவடியின் அழகைக்கண்டவரும், திருமுடியைக்கண்டு ஈடுபட்டவரும், திருக்கரத்தின் அழகைப் பற்றிய சிந்தனையில் அமிழ்ந்தவரும் முத்திபெற்றவராவர் என்பது உண்மையன்றே? இறைவனது வடிவழகே இங்ஙனமாகுமாயின், அவனது எல்லையற்ற குணங்கள் ஒவ்வொன்றின் இயல்பை நுகர்ந்தவர்க்குள்ளும், அனுபவத்தைப்பற்றிய பேச்சுகள் வேறுபடுதலால் வந்த இழுக்கு ஒன்றும் இல்லை; ஏனெனில் அனைவரும் இறைவனது திவ்வியகுணம் ஒன்றினைச்சுவைத்தவரே; அதனால் அனைவரும் முத்திபெற்றவரே. ஆக அனுபவம் ஒன்றேயாயினும், அதைப்பற்றியஉரைகள் முரண்படலாம்; முரண்படுதல் இன்றியமையாதது என்னலும் அமையும். ஆதலின் உண்மையொன்றே, அனுபவம் ஒன்றே, ஆயினும் உரைகள் பலவாம். தத்வம் ஒன்றே, முத்திநிலையொன்றே, ஆயினும் மதங்கள் பலவாம். மெய்ப்பொருள் (தத்வம்) ஒன்றே, அதனை அனுபவிக்கும் அனுபூதி நிலை ஒன்றேயெனினும், அவ்வனுபவத்தைப்பெற்றவர் அதை அடைவதற்குரிய நெறியைக்குறிக்கும்போதும், அனுபவத்தையும் மெய்ப்பொருளையும் பற்றிக்காரணகாரியமுறைக்கிணங்கவும் தருக்க நூல்முறைக்கு ஏற்றவாறும் வரிசைப் படுத்தி உரைக்கும்போதும், தமது அறிவுகட்கேற்ப வெவ்வேறுமதக்கொள்கைகளைக் கூறிவருவார்; அக்கொள்கைகள் வேறுபடினும் அவைகளால் எய்தும் இறுதிப்பயன் ஒன்றேயாம்.

சமயங்கள்கூறும் தத்துவமும் உபாயமும் பயனும் வேறுவேறாகச்சொல்லப்படினும், அவைகளனைத்தும் மெய்ப்

பொருட்காட்சியையும் முத்தி இன்பத்தையும் தரும் என்பது பொது இலக்கணம். தாய், மக்களின் சக்திகட்கும் ருசிகட்கும் தக்கவாறு வேறுவேறு உணவுப்பொருள்களைச் சமைத்துக்கொடுத்தாலும் அனைவரும் உண்டு பசியாறி உடல் நலம் பெறுகின்றனர் அன்றோ? அதுபோல் முத்திப் பசியுடையார்க்கு இறைவன் பலவாறாக அப்பசியை ஆற்றினாலும், பசிப்பிணி ஒழிதல் அனைவர்க்கும் பொதுவாகும். அதுபோல் பிறவிநோய் தீர்தல் ஒன்றே. இறைவனாகிய வைத்தியநாதாது குறிப்பு; பற்பல மருந்துகளை அவரவரது நோய்க்கும் நோயின் காரணத்திற்கும் உடலியல்பிற்கும் தக்கபடி அவர் மாற்றிக்கொடுத்தால், அவ்வேறுபாடு இன்றியமையாததேயாம். அதிற் பிழையும் இல்லை. இவ்வாறே பலசமயங்கள், தத்துவங்களைப்பற்றியும் பிறவற்றைப்பற்றியும் பலவாறாகக்கூறும் இயல்பினவாகின்றன. ஆயினும் "புகுந்து பார்க்கில்" விளையாட்டுகளின் பல வகைகளுள்ளும் விளையாட்டும் அதன் பயனாகிய இன்பமுமே புலப்படுவதுபோல், முடிபு ஒன்றாவது விளங்கும். முரண்பாடும் அதனால் வரும் பகைமையும் போரும் எழுதற்கு இடமிராது "பகவானைப்பார்த்து உத்தவர் (உத்தவகீதையில்) சிலர் தத்துவங்களை இருபத்தெட்டு என்றும். சிலர் இருபத்தைந்தென்றும், சிலர் ஏழென்றும், சிலர் ஒன்பது என்றும் ஆறு என்றும் நாலு என்றும், பிறர் பதினொன்று என்றும் கூறுகின்றனர். இவ்வாறு ரிஷிகள் பலவாறாகக்கூறுவதின் கருத்தியாது? என்று வினவினர். அதற்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான், அவர்கள் எவ்வாறு (மாறுபாடாக) கூறினாலும், அனைத்தும் பொருத்தமாகும்; எவ்வாறெனில், ஒவ்வொரு வகையான எண்ணிக்கையிலும் எல்லாத் தத்துவங்களும் அடங்கியுள்ளன........தத்துவங்களை ஒவ்வொருவரும் காரணகாரிய முறைப்படி வகுத்துக்கூறும் வரிசையையும் அத்தத்துவங்களையும் உண்மையென்று

அங்கீகரிக்கிறோம்; ஏனெனில் அனைத்திற்கும் யுக்தியுண்டாதலின், என்று விடையளிக்கிறார். முரண்பாடு தத்துவங்களின் எண்ணிக்கையிலும், காரணகாரியமுறைமையிலுமேயன்றி, மெய்ப்பொருளிலும் அனுபவத்திலும் இருப்பதில்லையென்பதே முடிந்த பொருளாகின்றது.

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனை
பத்திநெறி யறிவித்துப்பழ வினைகள் பாருவண்ணம்
சித்தமல மறிவித்து சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.
(மாணிக்கவாசகர்)

குலவுசற் குருவின்பாதக் குளிர்புனலை மேற்கொண்டால்
உலகினிற் தீர்த்தமெல்லாம் உற்றபே றடைவர்போல
நலமெய்யாகிய கைவல்ய நவநீத நூலைக்கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞானிகளாய் வாழ்வார்.



சிவமயம்.

# வடலூர்
# ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் சரித்திரம்.

(ஐயே ஒரு சேதிகேளும் என்ற மெட்டு.)

பார்புகழ் பொன்னம்பலவன் - பதமலர்
பாம்புபுலி போற்றுந்தில்லைப் பதிக்கணிதாய்
சீர்பெரும் மருதூர்வாழ் - சிவபத்தி
சிறந்து விளங்கும் கருணீகர் குலத்தில்
பேர்பெறும் ராமையப்பிள்ளை - அவருக்கைவர்
பெறலரும் சேர்நிறைய தான மனைவி
பூர்வவினை யின்பயனும் - பிராரத்துவ
போகமுடிந் தொருவர் ஒருவர் பின்னுச்
சிவனடி சேர்ந்திடவே - பின்னேரியெனும்
திருமக ளுறைபதி ஜெனித் துருவாய்
அவனியி லருந்ததிபோல் - கற்பிற்சிறந்த
அழகுடை மகளிர்சின்னம் மையெனு மோர்
பெண்மணி தனைமணந்து - தர்மநெறியைப்
பேணி இல்வாழ்க்கை தவறின்றி நடத்தி
உண்மை யுளத்திற் பதிவாய் - இருந்தெழுந்த
உணர்ச்சியால் புத்திரப்பேர் தனை நினைந்து
சிற்றம்பல வனைப்போற்றி - அனவரதம்
சிந்தித்தவன் பதத்திலன்பு மிக்கவே
பற்றுறுந் தவப்பயனால் - அம்மைக்குச்சபா
பதிபரசு ராமனுண் மக விருவர்
சுந்தரம் உண்ணுமுலை என்ன - பெண்களிரு
சோதரி மார்களும் பின் ஜெனித்திடவே

சந்ததம் மதலைமொழிகேட் - டானுந்தித்து
சதிபதி இருவரும் விதிவழுவா
தருமமியற்றி வருநாள் - ராமையப்பிள்ளை
தமதகம் விட்டுவெளிச் சென்றதொருநாள்
குருஉருப் பரசிவமும் - குறித்தறியக்
கொடுபுலி யாடையுடன் கரமதனில்
திருவோடு கமண்டலமும் - செங்கைதுலங்க
தெரிசனமாய்ச் சின்னம்மை முகநோக்கி
பசிதணிவதற் குணவு - தருதியென்ன
பாவை சின்னம்மை மனத் தூய்மையுடனே
ஆசனமிட்டு வதன்மேல் - எழுந்தருளும்
ஐயன்மீர் என்றவர் பொற் பாதமதனை
ஜலத்தினல் சுத்திசெய்ததும் - பத்திரபுஷ்பம்
தான்கொண்டார்ச் சித்து ~~அன்னம்~~ அன்னம் தனை
களை பசி தணிந்தவுடன் - உளம்மகிழ்ந்து [படைத்து]
கருத்தறிந் திட்டவண்ணம் பொருத்தமதாம்
ஆதலின் நினைக்குளன்னல் - தரத்தக்கது
அருள் பெறும் பஞ்சாக்கரத் திருநீறும்
கோதை இதை நீயருந்தில் - எனைப்போலவே
குழந்தை உனக்குண்டாகும் எனமொழிந்து
யோகியர் மறைந்தவுடன் - பர்த்தாவரவும்
உள்ளதனை உள்ளபடி சொல்லி மகிழ்ந்தே
தேகம் புளகாங்கிதராய் - அன்று தொடங்கி
சேயிழையால் கருவுற்றுத் தோயவளர்ந்து
உறையும் கற்பமும் பூர்த்தி - ஆனதுங் கலி
யுகம் நாலாயிரத்துத் தொள்ளாயிரமாம்
இருபத்தைந்தில் சுபானு - தெக்ஷிணயனம்
இலகுவருட ருது புரட்டாசி

தேதியும் இருத்தொன்று . பூர்வபக்ஷம்
துதியை ஆதிவாரம் உதையாதி
மீதி நாழிகை யிருபத் - தொன்பதே முக்கால்
மீனலெக்னம் நக்ஷத்திரம் சித்திரையாம்
நாலாங் காற்றுலாராசி - கூடும்சுப
நாளில் ஜெனித்ததொரு ஆண்மகவும்
மேலாயுதித்தவுடனே - ராமையபிள்ளை
முன்பின் பாராமல் இராமலிங்கம் எனவே
பிள்ளைக்குத் திருநாமம் - சூட்டிப்பின்பு
பெற்றோரும் மற்றோரும் - களிப்புற்றுவளர்க்க
கள்ளங்கடந்த தந்தையர் - ராமையப்பிள்ளை
காலகாலன் காலடியிற் கலந்திடவே
ஈமக்கடனை முடித்துச் - சபாபதியார்
இருக்க ஆருமாதத்தில் பொருக்கெனவே
தாமும் குடும்பத்துடனே - சென்னைக்கேகி
சர்வகலா சாலையில் போதகராய்
வருமந்த ஊதியத்தை - கொண்டு குடும்ப
வாழ்க்கை யதைநடத்தி வருநாளில்
அருமைதன் சோதரராம் - ராமலிங்கம்
அவர்க்கு மூவாண்டிலொரு வேதியர்முன்னே
வித்தியாரம்பத்தைச் செய்து - தம்பிக்குத் தாமே
வேணச்செந்தமிழ்க்கல்வி விரித்துரைக்க
அத்யாவசியமாயோதி - வயதைந்திற்குள்
அரிய தமிழ்ப் புலமை அதிகரிக்க
பூர்வவாசனைமீறி - குரு கடாக்ஷ
புண்ணியமிரண்டுமொத்துப் பொருந்திடவே
சார்புறும் ஏழு வயதில் - பக்தியுண்டாகி
தனித்தமுத்தியிலன்பும் சத்யவுணர்வும்
வரவரப் பெருகிடவே - குருவருளின்
வழியே தமையனார் தன் தம்பியுடனே

திறமுடன் சிவதீக்ஷை பெற்றபின் தம்பி
சிறுபிள்ளை ராமலிங்கம் அருளடைய
ஆலயவழிபாடும் - அதிகரிக்க
அகமுகநாட்டமது அடிக்கடியே
சாலவும் பொருந்திடவே திருவெண்ணீறு
தரித்துத் திரு மந்திரச் சிறு புத்தகம்
உருத்திர ஜெபமாலை - சிவசின்னமாய்
உவப்பமுருகக்கட வுளைத்தினமும்
கருத்திலிருத்திவரவே - ஞானமுதிர்ந்து
கலைகள் எவைக்கும் பொருள் கணித்துரைக்க
சபாபதியாகுந்தமையன் - ராமலிங்கத்தை
தனக்குபதேசிகருய்த்தரமிருத்தி
சுபர்சுபமதையறிந்து - போனதும் பிள்ளை
சேவற்கொடியோன் றிருவருளைப்பெற்று
பதினும் ஆண்டதனில் - திருவொற்றியூர்
பதிவளர் தியாகரைப் பணிந்துவர
மதிநதியணிபரமன் - குருவுருவாய்
மவுனோபதேசஞான நெறியுணர்த்தி
அருளுதயமதாகும் - அதனுலரன்
அடியிணைப்புகழ்நிதம் அறைதகநீ
பருவமிதாகுமெனவே - திருவருட்பா
பாடலுற்றதுந் திருவருட்செயலே
ஒற்றியூர்ஞானசம்பந்தம் - பிள்ளையவர்முன்
உவந்துஞான விசாரம்செய்துமுடிய
பற்றற்ற ஞானியிவர்க்கு - தாய் தமையன்
பந்து கல்யாணச் சுபம் புரிந்திடவே.
இல்வாழ்க்கைத் தனையறியா - இன்பானுபவத்
திருந்து சகச நிட்டை யதிற்களித்தே
பல்கலைவல்லுனர்க்கும் - ஞானர்த்தப் பொருள்
பரிவாயெடுத்துணர்த்தும் தெரிவுறுவாய்

தமையீன்ற தாய் சின்னம்மை - சிவனடியைச்
சார்ந்திட சிவநெறி முறைப்படிக்கே
அமைவுறு கடன்முடிக்க - அன்பரொருவர்
அரியவறுமைப்பிணி தனைத்தவிர்க்க
பொருளுடையோர்க்கு விகிதம் - தருகவெனப்
புகலலும் ஸ்வாமிகள் புன் முறுவலுற்று
இருளறு சோதிவடிவன் - தனையன்றி
ஏட்டாலுங்கேளையலென்ற பாட்டதைச்சொல்லி
தற்போதமதையிழந்து - நிருவிகற்ப
சகஜசுபாவமதாய்த் தானிருந்தும்
அற்பதேகாபிமான - உலகத்தோர்க்குள்
அவரும் ஒருவரெனத் தான்மதித்து
மற்றுமோர் நண்பரொருவர் - தன் புத்திரியின்
மணக்காக்ஷிக்கெழுந்திடத் தான் துதிக்க
சொற்றுணைவேதியனல்லால் - இத்தொல்லுலகோர்
துதிக்கும்சோடில்லை வெள்ளைச் சொக்காயுமில்லை
பாடில்லையெனமொழிந்து - பழம்பொருளின்
பண்புறும்செல்வத்துறைத் தில்லைப்பதிக்கு
நாடிச்சகோதரருடன் - திருமயிலைச்
சார்ந்துவிடபக்காக்ஷி தரிசனமும்
செய்துபுதுவைக்கணுகி - சித்தாந்தநூலில்
தேர்ந்ததருமலிங்கம் செட்டியார்கேட்ட
மெய்யதுகண்டுபதேசித்து அவ்விடம்விட்டு
மேவியேநற் சிதம்பரத்தலமணுகி
சிற்சபைதனைக்கண்டு - சிற்சொரூப
தேவனவன்பாதமலர் போற்றிப்பணிந்து
கற்பனைக்கடந்தகாக்ஷீ - யிதையுணர்ந்து
கண்டவர்க்குப்போகமனம் காலெழாதாம்
என்றதிருப்பாட்டைப்புகன்று - அவ்விடமிருந்
தேகியேசீர்காழி ஆரூர்திருப்புகலூர்

சென்றுதிருப்பாப்புலியூர் - பிரம்மஸமாஜம்
சேர்ந்துஉபாஸனையின் உண்மைத்திறத்தை
வேதத்தின்மொழிப்படிக்கு - பிர்ம்மமதனை
விருட்புருடனென்றங்கு விளம்புவதால்
பேதமுடையமனமும் - உருவமன்றி
பிடிக்காதெதையும் அதனாலேயேபிரம்மம்
பிம்பத்தை அதிஷ்டித்திருக்கு - பிம்பத்தின் வழி
பிரம்மம் உபாஸனைக்குப் பொருந்துமென்றும்
சம்பிரமமாக உரைத்து - அங்கிருந்துபின்
சிதம்பர க்ஷேத்திரத்துக்கெழுந்து தில்லை
தாண்டவ தெரிசனம் செய்து - ஆனதும் தம
திருப்பிடமாகு மந்த மருதூர்பால்
காண்டல் அக்கருங்குழிக்கு - வந்ததுந்தமக்
கடுத்த தமையனெனும் பரசுராமர்
சிவனடிதனைச்சார - அவர்க்குரிய
செய்கடன் யாவற்றும் செய்து முடித்து
இமைப்பொழுதேனும் மறையா - ஞானேதயத்தன்
னிருப்பென்னும் ஆனந்தமயமாகி
தண்ணீரால் விளக்கெரித்து - தாரணிதனில்
தானிருக்குந் தானம்விட்டு ஏகுதற்கில்லா
புண்ணிய மூர்த்தியாம் வள்ளலின் - அருள்மொழியின்
போதமதைத் தானறியாத் தேவி பட்டணக்
கல்விச்செருக்குற்ற ஒருவர் - கர்வமிகுந்து
கணக்கிலவதானியவர் வரைந்துவிட்ட
நல்விதச்செய்யுள் ஒன்றுக்கு - திருவருளால்
ஞானக்கருத்தே யெழுதித் தானனுப்பிட
அடிகளிருக்குமிடத்தே - ஓடோடி வந்து
அடிமையாயெட்டுத்தினம் அங்கிருந்தேக
பிராம்மண சந்யாசியொருவர் - சுவாமிகள் முன்னே
பேசிடவேதார்த்தங்களைச் சூசிப்பித்ததும்

திராணியை யுணர்ந்து போற்றி விடையைப்பெற்று
சென்றதும் அன்றுதொடங்கிப் பிள்ளையவர்கள்
திருவருள் பிரேரகத்தால் - அருட்பாவினை
தினமும்பாட யாவரும் மனனஞ்செய்து
குருவருள் வாக்கியமீதென - ஓதியுவார்தற்
குரியவருட்பா ஆறுந்திருமுறையாய்
பெயர்தந்து பதிப்பிலிட்டு - வெளியானதும்
பேசரிய நூலிதென் றெல்லோரும் மகிழ
உயர்யாழ்ப்பாணத்து நாவலர் - அவர் தனக்கு
உற்றது வேஷத்தினல் மருட்பா வென்னலும்
சுவாமியின் சிஷ்யரவர்க்கும் - நாவலர் தமைச்
சார்ந்தவர்க்கும் போர்துவக்கமாக முடிய
காமியமெல்லாங் கடந்து - தானேதானுய
கருணைப்ரவாக வள்ளல் உள்ளத்திருந்து
பேரருளதைப் பகுக்கும் - ஜீவரெவர்க்கும்
பேதமையாம் அனுதிச் சேட்டையதினல்
மாறுளமொழியெவையும் - பொய்யுறுமென்ற
மர்மமறிந்தே உலகமீக்கீ பெருவீர்
தமையுணர்ந்தவர் வாக்கே - அருள்வாக்கல்லால்
தமைவிட்டுப் புறஞ்சொல்லல் மருள்வாக்கே
இமையளவேனும் மறவா தகத்திருத்தி
இன்றேடு தற்கமுறையதையொழிப்பீர்
எனத்திருவருள் வாக்கு - இசைத்ததன்பின்
எமதுவள்ளல் தமையன் சபாபதியார்
வினையுடல்நீத்தொழித்துச் - சிவநெறியை
விரும்பிச்சென்றசெய்தியை யறிந்துகொண்டு
நாற்பத்தைந்தாம் வயதில் - தில்லைக்கோபுரம்
நான்கு மொருங்கு தோற்றும் வடலூரில்
நூற்பதிபபாக அமைத்த - ஜீவகாருண்ய
வொழுக்கமெனும் உண்மையை விரித்தமைத்தே

சிதம்பர தீக்ஷிதரால் - அதற்குப்பூசை
செய்வித்தும் தர்மசாலை ஸ்தாபனம்பண்ணி
இதப்பெற மூன்றுதினம் - பதினாயிரம்
ஏழைகட்கு அன்னமிட்டு இன்புறச்செய்து
கருங்குழிக்கருகினுற்ற - மேட்டுக்குப்பத்தில்
கணித்தசித்திவிளாக மாளிகையில்
அருட்பெருஞ் சோதிவடிவை - அகத்திற்கண்டு
அகவல் ஒன்றைவரைந்து அமர்ந்திடுநாள்
புண்ணியசீலர்கட்கும் - மற்றையவர்க்கும்
புலைகொலை பொய்கட்காமம் தனையகற்றி
கண்ணியமுடன்வாழக் - கருத்துட்கொண்டால்
கடவுளை ஞானக்கண்ணால் காணப்பெறுவீர்
திண்ணம் ஈதாமெனச்சொல்லி - திரிபுறும்பொய்
தேகாபிமானங் கழலாதவர் தம்மை
மண்ணில்மெய் ஞானியெனவே - கூறுனுமென்ன
மருவானே என்றதிரு பாட்டதைச்சொல்லி
தன்னனுபவப் பொருளதாம் - திருச்சபையை
தன்னகத்தில் கண்டபடி புறத்துங்கட்ட
நன்னயமாய் பிரசோற்பத்தி - ஆனித்திங்களில்
காடித்தை மாதத்திற்குள் முடிப்பதற்கு
திருவருள் செயலாகும் - அன்று அதனுல்
செத்தா ரெழுந்திருப்பர் என்றுமொழிந்தே
தெருள்தரு மேட்டுக்குப்பம் - தனிலிருந்தே
சிற்சபைக்கு ஏழுதிரை யமைத்திடவும்
அருள்தரு ஞானபூமி - ஏழாம் அதனின்
அரும்பெருங்கருத்ததை உணர்த்திடவும்
குருவருள் வாக்கின்படிக்கு - அன்பர்குழாங்கள்
குறைவின்றிப் பல்லாயிரம் தனத்தைக்கொண்டு
ஞானசபை கட்டிமுடிக்கக் - கர்ப்பூரஜோதி
ஞாயமதைத்தான் நடத்திமீட்சி பெற்றுப்பின்

மேட்டுக்குப்பத்தை யணுகிக் - குடிசைபுக்கி
மோனநிலைத்தான மதிற்றானமர்ந்திட
கூட்டமாயெல்லோருங் கூடி - இறந்த எங்கள்
குழந்தைகளை யெழுப்பித் தருவீரென்ன
சித்துருவதாக விளங்கும் - வள்ளல்பெருமான்
சித்தமறியாத பித்தர் சித்தந்தெளிய
செத்தாரையெல்லாந்திரும்ப - எழுப்புதலிங்
கெத்தால் முடியுமெனின் எம்மவரே
சித்தாமருள் பெருஞ்சோதி - அதனால் முடியும்
தெருள்பெறும் சத்தியமிதாகும் எனவே
சத்தாஸ் பூர்த்தியதான - சதானந்தச்
சார்புறுமெய்மோன நிட்டைதனிலமர்வோம்
சித்திசார்வருங்காலம் - தெய்வீகத்தெழும்
தேர்ந்தகடிகையிறண்டரை யெனவே
நித்தியானந்தத்திலமர - அருட்கிருபை
நேர்ந்திடுங்காலமது அணுகியதால்
ஊனக்கண் உற்றஉங்களால் - எனதுதேகம்
உற்றுக்காணச் சற்றுந்தோன்றிடாமன்மறையும்
தானச்ச[illegible]மாதிக்காவது - அக்கினியிட்டு
தக்கவும் அகாதெனத் தெரித்துப்பின்னர்
ஸ்ரீமுக ஆண்டு தைத்திங்கள் - சுக்கிரவாரம்
தேதிபத்தொன்பதுற்ற புனர்பூசம்
சுவாமியின் திருவுருவம் - அநிநித்ய
செயற்கையுடலியற்கை உடலாகி
சித்திவிளாகத்துக்குள்ளே - தானமர்ந்திட்ட
திருவறை மூடிப்பூட்டக் குறிப்புணர்த்தி
சத்துசித்தானந்தப் பொருளாய் - துரியாதீதத்
தற்பரமாய் பொற்பொதுவாய்ச் சார்ந்தவெளி
(யே

மாணிக்கவாசகப் பெருமான் - மன்றுள்கலந்த
மார்க்கமீதாகுமெனவே யார்க்கும் உரைப்போம்
பேணித்துதிசெய்திடவல்ல - பிள்ளைப்பெருமான்
பேற்றினையாமும் அடைய மாற்றிப்பிறப்போம்.

சங்கர சங்கரனே சம்போ
சங்கர சங்கரசிவ சங்கரனே.

சுபம்.

## ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் சரித்திரச்சிந்து முற்றிற்று.



# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 22 | அழலேந்தியகையன் | குமரகுருபரன் |
| 8 | 17 | நின்னடிவர் | நின்னடியர் |
| ,, | 19 | நாவுள் | நாவுள்ள |
| 10 | 14 | முக்ஷு | முமுக்ஷு |
| ,, | 18 | பிரமத்தில் | பிரம்மத்தில் |
| 11 | 14 | பிர்மப் | பிரம்மப் |
| 12 | 8 | பிராப்த | பிராரப்த |
| ,, | ,, | சங்கித | சஞ்சித |
| 13 | 1 | பரமேஸ்வரனென்னும் | பரமேஸ்வரனென்றும் |
| 15 | 11 | தாக்பரிய | தாத்பரிய |
| 19 | 3 | இப்பிரமானந்தம் | இப்பிரம்மானந்தம் |
| 28 | 1 | மைற்றயதினும் | மற்றயதினம் |
| 32 | 14 | சாதாசனை | சாதாரணை |
| 36 | 22 | ரிர்த்தமிடு | நிர்த்தமிடு |
| 41 | 21 | ஜீவனன்ற | ஜீவனன்றி |
| 42 | 3 | அநிர்த | அநுர்த |
| 43 | 29 | யுகமிகுந்தாலும் | யுகமிருந்தாலும் |
| 44 | 21 | சித்தவிலாச | சித்விலாச |
| ,, | 30 | பொற்பது | பொற்பொது |
| 48 | 3 | சொல்யப்படும் | சொல்லப்படும் |
| 50 | 15 | புரான | புராண |
| 61 | 27 | எழும்பவது | எழும்புவது |
| 64 | 9 | சனனியாசமேது | சன்னியாசமேது |
| 66 | 3 | இந்திரரதி | இந்திராதி |
| 68 | 20 | கொசுக்கு | கொசுகு |
| 72 | 13 | அறிவிமயமாகி | அறிவுமயமாகி |
| ,, | 24 | ஸ்மரிச | ஸ்பரிச |
| ,, | 25 | வானமர் | வானவர் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 72 | 26 | அங்கனம் | அங்ஙனம் |
| 76 | 10 | முத்நியார் | முத்நியாந் |
| 79 | 13 | கர தூணு | கர தூஷணு |
| 80 | 6 | வனத்தைத | வனத்தை |
| 82 | 2 | அஹிம்ஸாமரமோ | அஹிம்ஸாபரமோ |
| 83 | 2 | உருவன் | உருவம் |
| 84 | 1 | பாக்கியங்களை | போக்கியங்களை |
| 85 | 12 | கரூளுவன்ன | கருளுவன்ன |
| | ,, | ரக்சோவே | ரச்சோவே |
| 87 | 8 | ஈசுவரதியான | ஈசுவரத்தியான |
| ,, | 11 | அபராகத்துக் | அபராகத்துக் |
| 88 | 7 | பூதகதைத | பூதகயை |
| 95 | 7 | செஞ்சுடினர்கள் | கெஞ்சினர்கள் |
| ,, | 15 | ளளவினை | ள்ளவிலே |
| 98 | 22 | கன்னீரும் | கண்ணீரும் |
| 102 | 21 | சமாதிலிருப்பவன் | சமாதியிலிருப்பவன் |
| 103 | 14 | இராக்கதத்துவேஷ | இராகத்துவேஷ |
| ,, | 15 | ,, | ,, |
| 104 | 20 | வேண்டியக்ககாரிய | வேண்டியக் காரிய |
| 108 | 7 | தன்னையிம் | தன்னையும் |
| 110 | 10 | பற்றிச்சித்தித்து | பற்றிசிந்தித்து |
| 115 | 14 | தனை அன்னம் படைத்து | அன்னந்தனைபடைத் |
| 117 | 19 | அதனலான் | அதனலரன் |
| ,, | 26 | பந்து | பரிந்து |
| 118 | 23 | அல்விடம்விட்டு | அவ்விடப் விட்டு |
| 122 | 19 | சாமாதி | சமாதி |

மதிப்புரை.

| | | | |
|---|---|---|---|
| 2 | 11 | ஹைஸ்கூல் | ஹைஸ்கூல் |

---

